திருப்பதிக்கு . . . வருகை புரியுங்கள்







## ஸ்ரீ கோவிந்தராஜசுவாமி கோயில், பிரம்மோத்சவம்.

### 12–5–89 முதல் 21–5–89 வரை

| தேதி | நாட்கள் | காலை உத்சவம் | மாலை உத்சவம் |
|---|---|---|---|
| 12–5–89 | வெள்ளி | —— | சேனாதிபதி உத்சவம் அங்குரார்ப்பணம் |
| 13–5–89 | சனி | திருச்சி உற்சவம், துவஜாரோஹணம் | பெரிய சேஷ வாகனம் |
| 14–5–89 | ஞாயிறு | சிறிய சேஷ வாகனம் | ஹம்ஸவாகனம் |
| 15–5–89 | திங்கள் | சிம்ஹ வாகனம் | முத்துப்பந்தல் வாகனம் |
| 16–5–89 | செவ்வாய் | கல்பவிருக்ஷ வாகனம் | ஸர்வ பூபால வாகனம் |
| 17–5–89 | புதன் | பல்லக்கில் மோகினி அவதாரம் | கருட வாகனம் |
| 18–5–89 | வியாழன் | அனுமந்தவாகனம் (மாலை வசந்தோசத்வம்) | கஜ வாகனம் |
| 19–5–89 | வெள்ளி | சூரியப் பிரபை | சந்திரப்பிரபை |
| 20–5–89 | சனி | திருத்தேர் | ஹஸ்வ வாகனம் |
| 21–5–89 | ஞாயிறு | தீர்த்தவாரி அவப்பிரதோத்சவம் | திருச்சியில் துவஜாவரோஹணம் |



சம்ப நாடன் னுமை செவி சாற்றுபூங்
கொம்ப நாடன் கொழுந னிராமப்பேர்
பம்ப நாடழைக் குங்கதை பாச் செய்த
கம்ப நாடன் கழறலை யிற் கொள்வாம்

சிவபெருமான் முன்பொரு சமயம் தன் தேவியான பார்வதியினது காதில் உபதேசித்த பூங்கொம்பு போன்றவளான சீதாதேவியினது கணவனாகிய ஸ்ரீ ராமபிரானுடைய திருநாமம் பரவும்படி தேசத்திலுள்ளாரெல்லாரும விரும்பிப் படிக்கின்ற ராம கதையை தமிழ்ப் பாடல்களாகச் செய்தருளிய கம்பநாட்டாழ்வாரது திருவடித்தாமரைகளைத் தலைக்கு அணியாகச் சூடுவோம் யாம்.

—*கம்பராமாயணம், தனியன்-7.*

ஏப்ரல் 1989

# சப்தகிரி

தனிப்பிரதி ரூ 1 மலர் 19

வருடச் சந்தா ரூ. 12 இதழ் 11

## உள்ளுறை



### அட்டைப்பட விளக்கம்

முன்னட்டையில் : ஸ்ரீ ராமர்
சித்திரம்; கே. ஜகதீஷ்,

பின்னட்டையில் : நவகிரகங்கள்.
போட்டோ: எம். ராஜ்யலக்ஷ்மி.

சிறப்பாசிரியர் :
திரு. சிஎச். வெங்கடபதிராஜு
I.A.S.,
செயலாட்சித் தலைவர்,
தி.தி.தேவஸ்தானம், திருப்பதி.

அச்சிடுபவர்
திரு. எம். விஜயகுமார் ரெட்டி,
மேலாளர்,
தி.தி. தேவஸ்தான அச்சகம்,
திருப்பதி.

ஆசிரியர்
திரு. கே. சுப்பாராவ், எம்.ஏ

துணையாசிரியர் :
திரு எம். எஸ். ராமமூர்த்தி, எம்.ஏ.,

பிரதிகளுக்கு :
EDITOR,
" Sapthagiri "
T. T. Devasthanams,
TIRUPATI.

# உங்களுடன் . . . .

குறை இருப்பது பெரும்பாலோரது பலவீனம். குற்றம் புரிவது பலரது அறிவீனம். பலவீனமும் அறிவீனமும் மனிதனின் பொதுச்சொத்து, இது காலம் காலமாக வரும் மனிதனின் பரம்பரைச் சொத்து. சொத்தின் மதிப்பு அதிக மாகும் அளவு அதுவே மனிதனை — மனித ஆற்றலை அழித்திடும் ஒரு வேர்ப்பூச்சியாக அமைந்திடும். இப்பூச்சியை அடியோடு களைந்திட அல்லது அதன் வளர்ச்சியை அடக்கிட ஆன்றோர் கண்ட பலவழிகளில் ஒன்று சமயம் எனும் வாழ்க்கைநெறி.

உலக சமயங்களுள் இந்து சமயம் அறிவுறுத்தும் அளவு ஆன்மீக வாழ்வின் சிறப்பினையோ, மனித வாழ்வின் மேம்பாட்டினையோ பிற எந்த உலகச்சமயமும் உரைத்திடவில்லை. நீதிபோதனைகளைத்தான் பிற சமயங்கள் தந்திட்டன. ஆனால் இந்து சமயமோ வாழ்க்கை இலக்கணத்தையே வழங்கிட்டது. வேதஉபநிடதங்களே அவ்இலக்கணங்களாகும். இவற்றின் பொருளை, பெருமையை ''ரிஷி'' கள் எனும் தெய்வமக்களே அனுபவித்தனர். தாங்கள் அனுபவித்ததைப் பிறர் அனுபவிக்கவும், அநுசரிக்கவும் விரும்பிய ஆன்றோர், அவை தந்திட்டக் கருத்துக்களை இதிஹாஸங்கள், புராணங்கள் வடிவில் எளிமைப்படுத்தித் தந்தனர். அவற்றைத் தொடர்ந்தே சமயத்தலைவர்களும், தொண்டர்களும் பக்தி இலக்கியங்களைப் படைத்திட்டனர். வேதங்களையும் தற்கால பக்தி இலக்கியத்தையும் இணைக்கும் ஓர் ஆன்மீகப் பாலமாக, இதிஹாஸங்கள் எனும் காவியங்கள் விளங்கி வருகின்றன. சாதாரண மனிதன் பார்த்து, கேட்டு, அறிந்து, தெளிவு பெறும் வகையில் வாழ்க்கை உண்மைகளை நேரிடையாகவும், மறைமுகமாகவும் கூறிடும் பாங்கு காவியங்களுக்கே உரிய தனி அழகாகும்.

இந்து சமயப் பிரிவுகளில் தனக்கென ஒரு தத்துவச் சிறப்பினையும், பக்திப் பாதையினையும் வகுத்துக்கொண்டது வைணவம். சரணாகதி சிறப்பினையும், பாகவதப் பெருமையினையும் பேசிடும் வைணவம் தந்திட்ட மகாபாரதமும், இராமாயணமும் இந்தியக் கலாசாரத்தின் மாண்பினை விளக்கிக் கூறும். மேலும் அச்சமயத்தின் உயர் சிறப்பு அது கொண்டுள்ள பரம்பொருளின் அவதாரக் கொள்கையாகும். ''அதர்மம் தலை விரித்தாடும்போது, தர்மத்தைக் காக்க இம்மண்ணில் அவதாரம் மேற்கொள்ளுகிறேன்' எனும் கண்ணனின் வாக்கு, இப்பாருக்குத் தந்திட்ட நம்பிக்கை ஊட்டும் உறுதிமொழியாகும். அவ்இறைவனின் அவதாரம் இருபத்திநான்கு எனினும் முக்கியமாகப் பேசப்பெறுவது பூர்ணாவதாரங்கள் எனும் இராமாவதாரமும், கிருஷ்ணாவதாரமுமாகும்.

காட்சிகளை ஏற்படுத்தி, நிகழ்ச்சிகளை நடத்திக்காட்டி, வாழ்க்கை உண்மைகளைச் சொல்லிக் காட்டி துவாபர யுகத்தின் தர்ம அதர்மங்களுக்கேற்ப விளங்கியவன் கிருஷ்ணாவதார நாயகன் கண்ணன். இதற்கு நேர்மாறாக, உபதேசம் செய்யாமல், வாழ்க்கை தர்மங்களைத்தன் வாழ்க்கையில் அனுபவித்து, அவதார புருஷன் என்றழைக்கப்படாமல் சாதாரண புருஷராகவே விளங்கி, சாதாரண மனிதனையும் பல நிலைகளில், பலவகைகளில் தன் பக்கம் ஈர்த்திடும் இராமனின் கதை கூறும் இராமாயணம் உண்மையில் ஒரு மக்கள் காவியமே என்று துணியலாம்.

சமயம் என்பதையும், அது காட்டிடும் இறைவன் என்பதையும் சற்றே மறந்து காகுத்தனின் பெருமை பேசிடும் இராமாயணத்தினை ஒரு சாதாரண மனிதனின் கண்ணோட்டத்தில் பார்த்திடும்போது, அது படைத்திட்ட பாத்திரங்கள், அவை நிகழ்த்திடும் காட்சிகள் – உணர்த்திடும் கருத்துக்கள் ஆயிரம் கலியுகங்களைக் கடைத்தேற்றுவனவாக அமைந்துள்ளன. இராமன் ஒரு அவதார புருஷன் என்பதைப் படைத்தவர்கள் ஆங்காங்கு அடையாளங் காட்டினாலும், சாதாரண மனிதனிடமிருந்து இராமனையோ, அவனைச் சார்ந்த பாத்திரங்களையோ வேறுபடுத்திக்காட்டாது கவிஞனின் திறமையை எடுத்துக் கூறினாலும், காவியத்தின் பின் நின்று விளங்கும் நேர்மை, வாய்மை, எளிமை அன்பு எனும் அறப்பண்புகளின் வலிமையே எடுத்துக் கூறப்படுகின்றது.

சத்துவ, ரஜோ, தாமஸ குணங்களின் உருவங்களாக கௌசல்யை, சுமித்ரை, கைகேயி பாத்திரங்களும், தர்மம், மோக்ஷம், அர்த்தம், காமம் போன்ற புருஷார்த்தங்களின் பிரதிபலிப்புகளாக இராமன், பரதன், லக்ஷ்மணன், சத்ருக்னன் பாத்திரங்களும், மாயையின் மோகத்தால் பரமாத்மாவிடமிருந்து பிரிந்துள்ள ஜீவாத்மா அடையும் துன்பங்களுக்கு இராமன் – மாரீசன்–சீதை பாத்திரங்களும் படைக்கப்பட்டன என்பது கவிஞனின் உள்ளத்தை நேக்கூர்ந்து நோக்கின் புலப்படுவது மட்டுமன்றி, இந்து சமயத்தின் ஆன்மீகப் புலமையினையும் உணர்த்தச் செய்யும். ஆணவமும், காமமும் உள்ளத்தையும், உடலையும் அழிக்கவே பிறந்தன என்பதை இராவணனின் பாத்திரம் விளக்கவே செய்யும். இதுபோன்ற தத்துவ உண்மைகளை எல்லா காண்டங்களிலும் பல பாத்திரங்கள் வாயிலாக நமக்குக் கவிஞன் எடுத்துக் காட்டியுள்ளான்.

வாழ்க்கை என்றால் இன்பம் – துன்பம், நன்மை – தீமை, வாய்மை – பொய்மை, வெற்றி – தோல்வி போன்ற முரண்பாடுகளைக் கொண்டு கலந்தே இருக்கும் என்பதை இராமன் – இராவணன்; சீதை – சூர்ப்பணகை, வாலி – சுக்ரீவன்; கௌசல்யை – கைகேயி; மந்திரை – சபரி போன்ற பாத்திரங்கள் மூலம் எடுத்துக்காட்டி, அம்முரண்பாடுகளை அணுகும் விதத்தையும், வெற்றிகொள்வதன் அவசியத்தையும் பல நிகழ்ச்சிகளின் மூலம் விளக்கியிருப்பது இராமகாதையின் தனிச்சிறப்பாகும்.

பிரணவ ஸ்வருபியான இராமன் தான் ஒரு அவதார புருஷன் என்பதை மறந்து சாதாரண மனிதனாக விளங்கிய நிலையில், தந்தை சொல்லே மந்திரம் என்பதையும், ஒருவனுக்கு ஒருத்தியே உயர் வாழ்க்கை என்பதையும், குகனை– அனுமனை – வீடணனை தன் சுற்றமாகக்கொண்டதன் மூலம் நட்பிற்கும் அன்பிற்கும் இனம், நிறம், உருவம் தடைகளல்ல என்பதையும் அப்பாத்திரம் நமக்குக் கூறும் செய்திகளாகும். கணவன் இழந்தாலும், மகனைப் பிரிந்தாலும் நிலை தடு

(48-ம் பக்கம் பார்க்க)

# செய்திச் சுருக்கம்



திருவுருவச்சிலையினைத் திறந்து வைத்தபோது

## கட்டிடத்திறப்பு விழா

திருப்பதியிலுள்ள தி. தி. தே. போக்குவரத்து அலுவலக வளாகத்தினுள் அண்மையில் ரூ. 10.5 இலட்சம் செலவில் கட்டப்பட்ட நிருவாகம் மற்றும் கிடங்குக்கான கட்டிடத்தை ஆந்திரமாநில அறநிலையத்துறை அமைச்சர் திரு. கே. அப்பலநாயுடு அவர்கள் திறந்து வைத்தார். இது போது தி. தி. தே. செயலாட்சித்தலைவர் திரு. சிஎச். வெங்கடபதிராஜு அவர்கள் உள்ளிட்டுப்பல்வேறு உயர் அலுவலர்களும் உடன் இருந்தனர்.

## ஜயந்தி விழா

தெலுங்கு இலக்கியத்தில் பெரிதும் ஈடுபாடு கொண்டவரும், கவிதை, நாவல், திறனாய்வு போன்ற துறைகளில் மிகவும் தேர்ச்சிப்பெற்றவரும், ஸ்ரீ வேங்கடேஸ்வரரின் தீவிர பக்தரும் தெலுங்கு இலக்கியத்தில் ஒரு மறுமலர்ச்சியினை ஏற்படுத்திய ஸ்ரீ அன்னமாச்சார்யாவின் சிறப்பினை நாடு அறிந்துகொள்ள வழி வகுத்தவருமான திரு. வேட்டூ பிரபாகர சாஸ்திரி அவர்களின் முதல் நூற்றாண்டு பிறந்த நாள் விழா 31-3-89 முதல்,மூன்றுநாட்களுக்குத் திருப்பதியில் வெகு விமர்சையாகக் கொண்டாடப்பட்டது. 31—3—89 அன்று காலை இவ்விழாவின் துவக்கநாள் நிகழ்ச்சிகள் திருப்பதியில் தி. தி. தேவஸ்தானத்தாரின் ஸ்ரீவேங்கடேஸ்வரா கீழ்த்திசைக் கல்லூரி வளாகத்தில் நடைபெற்றன. கல்லூரி வளாகத்தில் சுமார் ரூ. 24,000 செலவில் சென்னை நாகப்பா குடும்பத்தாரால் உருவாக்கப்பட திரு. பிரபாகரசாஸ்திரி அவர்களின் மார்பளவு வெண்கலத் திருவுருவச் சிலையினை, தி. தி. தே. முன்னாள் செயலாட்சித் தலைவரும், பொறுப்பாண்மைக்குழுத் தலைவருமான திரு. சி. அண்ணாராவ் அவர்கள் திறந்து வைத்தார். திரு. ஜி. பாலகிருஷ்ண பிரஸாத் அவர்களின் கடவுள் வாழ்த்தினைத் தொடர்ந்து, விழாவிற்கு வருகை புரிந்தோரை தி. தி. தே. அன்னமாச்சார்யா திட்டத் துறை ஒத்திசைவாளர் அஷ்டாவதானக் கலைஞர் டாக்டர். மேடசானி மோகன் அவர்கள் வரவேற்றுப் பேசினார். பின்னர் விழாவின் சிறப்பு விருந்தினரான திரு. சி. அண்ணாராவ் அவர்கள் பேசுகையில் திரு. பிரபாகரசாஸ்திரி அவர்களுக்கும், தனக்கும் உள்ள நட்பு, இலக்கிய உலகத்திற்கும் சாஸ்திரி அவர்களுக்கும் உள்ள உறவு, அன்மையயாவின் செப்பேட்டுப் பாடல்களை நூல் வடிவில் கொண்டு வர திரு. பிரபாகர சாஸ்திரி அவர்கள் எடுத்த முயற்சி, ஆற்றிய அரும் பணி ஆகியவற்றை நினைவுகூர்ந்தார். பின்னர் விழாவிற்குத் தலைமை வகித்து உரையாற்றிய தி. தி. தே. செயலாட்சித் தலைவர் திரு. சிஎச். வெங்கடபதிராஜு அவர்கள் இந்நூற்றாண்டுவிழாசம்பந்தமாக தி. தி. தே. பிரசுரித்த மலர் ஒன்றினையும் வெளியிட்டார். இறுதியில் விழாவிற்கு வந்திருந்த வேட்டூரி பிரபாகர சாஸ்திரி புதல்வர்களில் ஸ்ரீ வேட்டூரி ஆனந்தமூர்த்தி மற்றும் திரு. வே., குருபிரஸாத் ஆகியோர்களுக்கு தி. தி. தே. சார்பில் திரு. சி. அண்ணாராவ் அவர்கள் மலர்மாலை அணிவித்துப் பொன்னாடைப் போர்த்திக் கௌரவித்தார். அன்று காலையும், மாலையும் மற்றும் அடுத்த இரண்டு நாட்களின்போதும் சாஸ்திரி அவர்களின் இலக்கியங்கள் பற்றிய கருத்தரங்குகள், உரைக்கோவைகள் கொண்ட இலக்கிய நிகழ்ச்சிகள் பல்வேறு அறிஞர் பெருமக்களால் நடைபெற்றன.

## உரைக்கோவை

திருப்பதி திருவேங்கடவன் பல்கலைக்கழகத்தில் தமிழ்த்துறையினரால் 'மேலைநாட்டுதாக்கத்தால்தென்னிந்திய மொழிகள் குறிப்பாகதமிழ் மொழியின்வளர்ச்சி' எனும் தலைப்பில் உரைக்கோவை நிகழ்ச்சிகள் 23-3-89 முதல் 24-3-89 வரை பல்கலைக்கழக வளாகத்தில் நடைபெற்றன. இவ்வுரைக் கோவையின் துவக்கநாள் நிகழ்ச்சிகள் 22-3-79 அன்று காலை 10 மணி அளவில் துவங்கின. தமிழ்த்

(47-ஆம் பக்கம் பார்க்க)

# அரிதான ஆலயம்-வேப்பஞ்சேரி தேவாலயம்


ஸ்ரீ லக்ஷ்மி நாராயணசுவாமி.

நம் பாரதநாடு ஆலயங்களுக்கு நிலையம். ஆந்திர நாட்டில் தெருவுக் கொன்ருக இருக்கும்சின்னஞ்சிறு ஆலயங்கள் பலவாகும். பெருந்தெய்வங்களுக்கும் கிராமங்களில் ஆலயங்கள் உண்டுஇந்த ஆலயங்களில்விஷ்ணு திருமால்)ஆலயங்கள் எத்தனையோ இருந்தாலும் ஸ்ரீலட்சுமி நாராயணசுவாமி ஆலயங்கள் எண்ணிக்கை மிகவும் குறைவு. வட இந்தியாவிலுள்ள பதரியிலுள்ள ஸ்ரீ பதரிநாராயண சுவாமி ஆலயம், கர்னுடகத்தில் மேல் கோட்டை ஸ்ரீசெல்வ ஸ்ரீநாராயண சுவாமி ஆலயம் போன்றன மிகச் சிறப்புடையன.

சித்தூர் ஜில்லா, கங்காதர நெல்லூருக்கு சமீபத்தில் வேப்பஞ்சேரி கிராமத்தில் நிலவி இருக்கும் ஸ்ரீ லட்சுமி நாராயணசுவாமி ஆலயம் சிறியதாயினும் சீரான இயற்கைச்சூழலில் பொருந்தி எழில் கொண்டு விளங்குகிறது. ஸ்ரீசுவாமியின் மடியில் அமர்ந்திருக்கும் அம்மையாரின் குளிர்ந்த பார்வை பக்தர்களுக்கு மனச்சாந்தியை உண்டாக்குகிறது. இந்த சுவாமி பக்தர்களுக்கு 'கல்ப தருவு' போல் பிரசித்திப் பெற்றுள்ளார். கோவிலின் வடகிழக்கில் இருக்கும் 'கோனேரி' காணத் தருந்தது. இது என்றும்வற்ருத ஒன்ருகும்.

இந்த ஆலயம் ஆதி காலத்தில் எவ்வளவோ சிறப்புப் பெற்றிருந்தது. எக்காரணத்தாலோ 30 ஆண்டுகளாக நாள்தோறும்பூசைஎதுவும்நடைபெருமல் போயிற்று. ஆலயத்துக்கு உத்சவ மூர்த்திகளும் இல்லாமல், ஆலயத்துக்குக்கதவுகளும்இல்லாமல் ஆலயம் சுற்றிலும் செடி கொடிகள் வளர்ந்து மிகவும் பாழான நிலையில் இருந்தது. முன்பு இந்த ஊர்வாசியும், இப்பொழுது திருப்பதியில்நியாயவாதியாகவும் இருக்கும் ஸ்ரீதர் அவர்கள் ஆலயத்தின் இந்த நிலையைப்பார்த்து மிகவும்மனம் நொந்தார். சிரமம் பாராது அதனைச் சீர்படுத்தக்கங்கணம் கட்டிக் கொண்டார். இதற்கு அந்த ஊர் பக்தர்களும், மக்களும் துணையாய் இருந்தார்கள். இதன் பயனாக 4 ஆண்டுகளுக்கு முன்பு தேவாலய ஜீர்ணோத்ரண, அஷ்டபந்தன, மகாகும்பாபிஷேகம் ஆகிய உத்சவங்கள் கண்ணுக்கு விருந்தாய் நடைபெற்றன. நாளாவட்டத்தில் ஆலயத்துக்குக்கதவுகளும், பிராகாரமும் உண்டாக்கப் பெற்றன. உத்சவ விக்கிரகங்கள் பிரதிஷ்டை செய்யப் பெற்றன. கருடன் விக்கிரகம், நவக்கிரகசந்நிதிகள், ஸ்ரீ விநாயகர் விக்கிரம் ஆகியன பிரதிஷ்டைச் செய்யப் பெற்றன. ஸ்ரீ சுவாமியின் உற்சவத்திற்குத் தேவையான வாகனங்களும் தயார் செய்யப்படுகின்றன. நாட் பூசைக்கும் தக்க ஏற்பாடுகள் செய்யப் பெற்றுள்ளன. இன்னும் எத்தனையோ வகையில் இந்த ஆலயத்தை அழகுபடுத்தி பிரசித்திச் செய்ய எண்ணி இருக்கிருர் நியாய

வாதி ஸ்ரீதர் அவர்கள். இவருக்கு இந்த காரியங்களுக்கு எல்லாம் இந்த ஊர் பெருங்கோவில் தர்மகர்த்தா வான ஸ்ரீஅம்பூரி ஜானகிராமி ரெட்டி, கணக்குப்பிள்ளை ஸ்ரீ தணிகாச்சலம் பக்கத்துணையாய் இருக்கிறார்கள். இந்த வருடம் திருமலை திருப்பதி தேவஸ்தானத்தாருடைய காலண்டர் முறையில் இந்த சுவாமிக்கும் காலண்டர்கள் வெளியிடப்பட்டன. ஸ்ரீசுவாமிகளின் உத்சவங்கள் ஒவ்வொரு வருடமும் சைத்ர மாதம் (ஏப்ரல், மே மாதங்களில்) நடைபெற இருக்கின்றன. அப்பொழுது T. T. D. சகாயத்தால் ஸ்ரீசுவாமி பற்றிய புராணக்கதைகள், பாட்டுக் கச்சேரிகள் முதலிய உன்னத நிகழ்ச்சிகள் நடைப்பெற்றன என்பது குறிப்பிடத் தக்கதாகும்


வேப்பஞ்சேரி திருக்கோயில்

இப்பொழுதே பிரசாரத்தைப் பெற்று வருகிறது இந்த சின்னஞ்சிறு மந்திரம். பக்தர்களையும், பெரியோர்களையும் கவர்ந்து வருகிறது. இந்த சுவாமி 'தட்சிண பலபிரதாத' என்று பெயர் பெற்றுள்ளார். பல பக்தர்கள் இங்கு வந்து சுவாமி தரிசனம் செய்து கொண்டு அனுக்கிரகம் பெற்றுப் பயன் பெற்றுள்ளார்கள். இந்தவருடம் ஜனவரி முதல்நாளன்று சித்தூர் அடிஷனல் டிஸ்டிரிக் அண்டு ஷெசன்ஸ் ஜட்ஜியான ஸ்ரீ தாசரி காரு இன்னும் பல பிரமுகர்கள் இந்த ஊருக்கு வந்து ஸ்ரீசுவாமியை தரிசித்தார்கள். இங்கு சுவாமியின் மடியில் அம்மையார் ஒதுங்கி அமர்ந்திருக்கும் மகிமை அருமையானது என்று காண்போர் சொல்லுகிறார்கள்.

இந்ததேவாலயத்தில் நாள்தோறும் இரவில் நாகப்பாம்பு ஒன்று வந்து அர்ச்சகர் விட்டுப்போன சுவாமியின் பிரசாதமாகிய பாலினைப்பருகி தேவாலயத்தைக் காத்து வருகிறது என்ற செய்திபிரபலமாய் இருந்துவருகிறது.

இந்த அரிதாகிய கோவில் அமைந்துள்ள வேப்பஞ்சேரி ஏழு கிராமங்களுக்குப் பெரிதானாலும், பிர்க்கா ஆனாலும் போக்குவரத்து வசதிகள் கொஞ்சம்கூட இல்லாமல் இருக்கிறது. ஊரில் சரியான சாலைகளும் தெருவு விளக்குகளும் இல்லாமல் இருப்பது மிகவும் வருந்தத் தக்கது. தனக்கென்று சிறிது பூமியைப்பெற்று என்டோமென்ட் ஆதிகத்தில் இருக்கும் இந்த ஆலயம் தக்க பிரதானத்தையும், முக்கியத்துவத்தையும் பெறுமல் இருப்பது பார்ப்போருக்கு மனக்கஷ்டத்தை உண்டாக்குகிறது. விரைவில்இக்குறைகள் நீங்கி,கோயில் பலரது கவனத்தையும் ஈர்க்கவே விழைகின்றோம்.


ருக்மிணி, சத்யபாமா சமேத ஸ்ரீவேணுகோபாலசுவாமி-கார்வேட்டுநகர்.

அசையாமல் தேங்கியிருக்கும் தண்ணீரிலும் வளைந்து வளைந்து கோணலாகச் செல்லும் அட்டை. அதுபோன்ற அசைக்க முடியாத நிலையில்செல்வத்திலும், உயர்பதவியிலும் அழுத்திக்கொண்டு, விருப்புவெறுப்பு என்ற குட்டையில் தேங்கியிருக்கும் பொழுது, உள்ளமும் வளைந்து வளைந்து கோணலாகவேசெல்லும்.

அப்படிக் கோணலாகச் சென்றது, பாண்டிய நாட்டு இளவரசி சுலட்சணு தேவியின் உள்ளம்.

அந்தக் குட்டையை உடைத்து நீரை வெளியேற்றிக் கோணலை நிமிர்த்தும் தொழிற் பட்டறை— அருள்மிகு திருக்கோயில்கள். வேண்டுதல் வேண்டாமையில்லாத இறைவனே—அங்குள்ள தொழிலாளி.

யரே'' என்று கூறுவர் பட்டினத்தடிகள்.

தொழிலாளியான அந்த இறைவனைக் காண முடியாமையால் அவளது இயல்புகளையும் அவளால் காண முடியவில்லை. அவளது உள்ளுணர்வுகளை உணராத நிலைமையில் இறைவழிபாடுகளை நடத்தி வந்தாள்.

அமாவாசை இருட்டை விரும்பும் திருடர்களைப்போல், ஞானச்சுடராகத் தோன்றும் இறைவனுக்குப் பொருளைக் கொண்டு வழிபாடுகள் செய்வதிலேயே ஆனந்தப் பரவசத்தில் மூழ்கினுள் அந்த மாதரசி. அந்த வழிபாடுகளில் மறைந்துள்ள தத்துவத்தை அவள் உணரவில்லை. உணர முயலவுமில்லை. ஆசார்யனருள்

தியினைப் பெற முடியும். குறியைப் பார்த்து எய்யப்பட்ட அம்பானது அக்குறியின்மீது பாய்ந்து அதனுடன் ஒன்றுபட்டுப் போகும். அதுபோல் இறைவனுடைய திருவடி என்ற குறியைப் பார்த்து உடல், உயிர், உடைமை ஆகிய எய்யப்பட்ட அம்புகள் அக்குறியின்மீது பாய்ந்து ஒன்றுபட்டு அவனுல் உவப்புடன் ஏற்றுக் கொள்ளப்படும் பொழுது, பற்றற்ற நிலை ஏற்படும்.

**'ஆதும் ஓர் பற்றில்லாத பாவனை**
**அதனைக் கூடில் அவனையும்**
**கூடலாமே'**

எனகிறுர் நம்மாழ்வார்.

பற்றில்லாத பாவனையில் கடமைகளைச் செய்து ஞானமெய்தி இறை

# நெஞ்சமே கோவில்–
# ராம நாமமே பூட்டு

அடிக்கடி அந்த இளவரசி போவாள் தொழிற் பட்டறைக்கு. ஆனுல் அங்குள்ள தொழிலாளி காணப்பட மாட்டான்-அவளுடைய ஊனக்கண்களுக்கு தன்னைக் காண்பதற்காக அர்ச்சுனனுக்குக் கொடுத்த ஞானக் கண்களை அவன் கொடுக்கவில்லை அவளுக்கு ஏன் ?

விருப்பு வெறுப்புக்கள் என்ற முத்திரைகளைக் கொண்டு நடனமாடியது, அந்த இளவரசி சுலட்சணுதேவியின் உள்ளம்.

விருப்பு வெறுப்புகளற்ற அதாவது 'பற்றற்ற பாவனை' என்ற முத்திரைகளைக் கொண்டு நடனமாடியது அந்தத் தொழிலாளியின் உள்ளம். எனவே அவன் ஞானக் கண்களைக் கொடுக்கவில்லை.

"........என்னே ! நின்னைக் காணுமாந்தர், தன்னையுங் காணுத் தன்மை

அமையப் பெருமையே அதற்குக் காரணமாகும்.

'பொருளைக் கொண்டு செய்யும் கருமயோகத்தைவிட அந்தக் கருமயோகத்திலடங்கிய ஞானமே சிறந்தது' என்று கூறுவான் கீதாசாரியன். (ச்ரேயான் த்ரவ்யமயாத் சஜ்ஞாத் ஜ்ஞாந யஜ்ஞ: பரந்தப) பக்த குசேலர் கொண்டு வந்த அவல் பொரியைவிட, அவருடைய தூய்மையான பக்தியையே விரும்பினுன் ஸ்ரீ கிருஷ்ணன்.

புறத்தே பொருளைக் கொண்டு வழிபாடு நடத்தும்பொழுது அகத்தே ஞான வழிபாடு நடக்க வேண்டும். அப்பொழுதுதான் கருமயோக நிலையினை உள்ளமானது அடைய முடியும். அதாவது பலனில் பற்றற்ற நிலையினைப் பெறமுடியும். பலனை இறைவனுக்கு அர்ப்பணிக்கும் பிரசாத புத்

யின்பத்தில் திளைத்திருக்க சுலட்சணு தேவியால் முடியவில்லை. அவள் கணவனும் சோழநாட்டு இளவரசனுமான மண்டலீகனுல் முடிந்தது. காரணம் அவன் வழிபாடு அமைந்தது புறத்திலே. அவன் வழிபாடு அமைந்தது அகத்திலே; சிந்தனு சக்தியின் தளத்திலே.

ஸ்ரீவில்லிபுத்தூர் ஏ. ஸ்ரீராமுலுதேசிகன்
புதுச்செந்நெல்குளம்

இளமையிலேயே அரசனுக்குரிய போர் முறைகளில் பயிற்சிபெற்றிருந்தான் அந்த மண்டலீகன். அந்தப் போர் முறைகளை அறவழியில் கையாளத் தெளிவான முறையில் ஆன்மீகப் பயிற்சியினையும் ஆசார்யன் மூலம் பெற்றிருந்தான்.

"ஸப்தகிரி" வாசகர்களுக்கும், எழுத்தாளர் பெருமக்களுக்கும் எங்களுடைய இதயங் கனிந்த தமிழ்ப்புத்தாண்டு வாழ்த்துக்கள் பல உரித்தாகுக.

—ஆசிரியர்.

ரண்டு ஓடுகிற புஷ்பரகங்களைச் சாமர்த்தியமுள்ள சாரதி அடக்குவது போல், காம குரோதங்களை அவனுல் அடக்க முடிந்தது. ராம தாரக மந்திரத்தை ஆசார்யன் மூலம் உபதேசம் பெற்றமையே அதற்குக் காரணமாகும்.

ராமன் படாத பாடுபட்டான், மக்களுக்கு அறநெறிகளை உணர்த்துவதற்காக நாட்டைத் துன்புறுத்தி வந்த அரக்கர்களைக் கொன்ருன், நாட்டைப் பாதுகாப்பதற்காக. அவனுடைய சரித்திரத்தைக் கேட்க வேண்டும்- அவன் மக்களை மக்களாக வாழச் செய்த உதவிக்காக என்று கூறிய நம்மாழ்வார், அப்படித் தியாகம் செய்த அந்த ராமபிரானுக்கு அடிமையாவாரேயன்றி வேறு யாருக்காவது மக்கள் அடிமையாவார்களோ? என்ற வினுக்குறியும் எழுப்புகிருர்.

"நாட்டில் பிறந்தவர் நாரணற்
காளன்றி யாவரோ
நாட்டில் பிறந்து படாதன பட்டு
மனிசர்க்கா
நாட்டை நலியும் அரக்கரை நாடித்
தடிந்திட்டு
நாட்டை யளித்துய்யச் செய்து
நடந்தமை கேட்டுமே?"
(7-5:2)

ராமனை நாரணன் என்று குறிப்பிடுகிருர் நம்மாழ்வார். நாட்டுப் பற்றில்லாத தெய்வப்பற்று யாதொரு பலனையும் ஏற்படுத்தாது. நாட்டுப் பற்று, தெய்வப்பற்று ஆகிய இரண்டையும் ஒருங்கே வளர்ப்பது ராமபிரான் வழிபாடு என்பதை மேற்குறிப்பிட்ட பாடல் குறிப்புணர்த்தும்.

ஸ்ரீராமபிரானை மண்டலீகன் எழுந்தருளச் செய்தான், தன்னுடைய நெஞ்சமென்னும் கோயிலில். அவன் காட்டிய தர்ம நெறி என்ற பொருளைக்கொண்டு ஆராதனை செய்தான், ராம நாமம் என்ற மலர்களால்.

எனவே அவன் உள்ளத்தில் 'நாட்டுப் பற்று' என்ற அரும்பு மலர்ந்தது. அது தெய்வப்பற்று என்ற காயாக உருவெடுத்தது; பின் தருமம் என்ற கனியாகக் கனிந்தது. தர்ம வழியில் நின்று மக்களுக்குச் சேவை செய்தான் அந்த மண்டலீகன்.

சுலட்சணுதேவி தன் கணவன் மண்டலீகனுடைய நடவடிக்கைகளின் மூலம் அறிந்துகொள்ள முடியவில்லை. அவனது ஆத்மஞானத்தை உணர்ந்துகொள்ள முடியவில்லை. அவனது இதயத்தில் ராமபிரான் இருந்து அருளாட்சிநடத்துவதைஅறியவில்லை உள்ளுரவளர்த்துக்கொண்டாள், தன்கணவன் கடவுள் பக்தியில்லாதவன் என்ற ஒரு அலட்சிய மனப்பான்மையை.

பீமன் போரில் ஈடுபட்டது தனது வெற்றிக்காகவே. பீஷ்மர் போரில் ஈடுபட்டது தனது வெற்றிக்காக அல்ல; தர்மத்தின் வெற்றிக்காக. பீமனுல் பீஷ்மரின் சீரிய மனநிலையினை உணர முடியவில்லை.

சுலட்சணுதேவி இறை வழிபாடு நடத்தியது தன் நலத்திற்காகவே. அவள் கணவன் மண்டலீகன் இறை வழிபாடு நடத்தியது தன் நலத்திற்காக அல்ல; நாட்டு மக்களின் நலத்திற்காக. சுலட்சணுதேவியால் மண்டலீகனின் சீரிய மன நிலையினை உணர முடியவில்லை.

ஒருநாள் இரவு தூக்கத்தில் மண்டலீகனுக்கு ராம தரிசனம் ஏற்பட்டது. "ராமா! ராமசந்திரா! ராம பத்ரா!" என்று கூறித் துதித்தான். காலையில் மனைவியின் மூலம் அதனை அறிந்தான். அகத்தே நடைபெற்ற இறை வழிபாடு புறத்தே தெரிந்துவிட்டதே என்ற கவலை கொண்டான். "இந்நாள்வரை என் நெஞ்சமே கோயிலாக நினைத்திருந்தேன். அதில் ராம நாமத்தைப் பூட்டியிருந்தேன். இப்பொழுது அவர் வெளியே வந்துவிட்டாரா? என்னைப் பிரிந்துசென்றுவிட்டாரா? ஹேராமா ராமா!" என்று கூக்குரலிட்டான். உயிர் உடலைவிட்டுப் பிரிந்தது.

சுலட்சணுதேவி தான் செய்த வெளிப்படையான, ஞானமில்லாத இறை வழி பாட்டைப் பெரிதென்றெண்ணிக் கணவனது ஞான பக்தியினைத் தாழ்வாக நினைத்தமைக்காக உள்ளம் குமுறி அழுதாள். "ஹே ராமா! நின் சரணல்லால் சரணில்லை. என்னைக் காப்பாற்று. மாங்கல்யப் பிச்சை கொடு. கல்லைப் பெண்ணுக்கிய உன் திருவடிகளைக் கல் போன்ற உள்ளத்துடன் ஆராதனை செய்தமைக்கு மன்னிப்பாயாக!" என்று கதறி அழுதாள்.

மண்டலீகன் விழித்தெழுந்தான். சுலட்சணை கண்பனிசோர, நாக்குழற ராமபிரானை வாழ்த்திஞள். தன்னுடைய நெஞ்சத்தைக் கோயிலாக்கிஞள். 'ராம நாமம்' என்ற பூட்டினை அதற்கு இட்டாள் காமம், குரோதம், லோபம், மோகம், மதம், மாச்சர்யம் என்ற ஆறு திருடர்கள் அதனுல் அவள் உள்ளத்தில் நுழைய முடியவில்லை. பின்னர் பக்தி நெறியினைப் பரப்பி வாழ்ந்தார்கள் அத்தெய்வத் தம்பதிகள்.

# மூன்று - ஓர் அறிமுகம்

முன்னுரை :

மூன்று என்றால் அது ஓர் இலக்கத்தைக் குறிக்கிறது என்பது யாவரும் அறிந்ததே. இந்த மூன்று என்ற சொல்லை, நாம் பல சந்தர்ப்பங்களிலும், சமூக வாழ்க்கையிலும், வேதாந்த விஷயங்களிலும் கையாண்டு வருகிறோம். ஆனால் மூன்று என்ற சொல்லைக் கேட்டவுடனேயே, சிலர் முகத்தைச் சுளிப்பதும் உண்டு. காரணம், இந்த மூன்று அவர்களுக்கு நன்மைப்பயக்கும் எண்ணாக அமையாதிருப்பதே. ஆனால் ஒரு சிலருக்கு இந்த மூன்று என்ற எண்ணே (பல எண்களின் கூட்டுத்தொகைகூட மூன்றாக இருக்க வேண்டும்) மிகுந்த நன்மை பயக்கக் கூடியதாக அமைந்துள்ளது என்பது அவரவர்கள் அனுபவம். வேதாந்தங்களிலும், சமூக வாழ்விலும் 'மூன்று' நிரந்தரமாக இடம் பெற்று, பெரும் பங்கு வகிக்கிறது என்பது கண்கூடானது. எனவே இந்த மூன்று எந்தந்த விதத்தில் வேதாந்தத்திலும், சமூக வாழ்விலும், பங்கு கொண்டிருக்கிறது என்பதை ஆராயவேணும் என்ற ஆசையின் முடிவே இக்கட்டுரையாகும்.

பல மொழிகளில் உள்ள 'மூன்று' என்ற சொல்லுக்குள்ள தொடர்பும் ஒற்றுமைகளும் :

பல மொழிகளில் 'மூன்று' என்ற எண்ணைக் குறிக்கும் சொல்லை ஆராய்ந்தால் வடமொழி, ஹிந்தி, ஆங்கிலம், தமிழ், தெலுங்கு, கன்னடம், மலையாளம் ஆகிய மொழிகளில் உள்ள மூன்றைக் குறிக்கும் சொல் ஒலி உச்சரிப்பில், ஒன்றுக்கொன்று தொடர்புடையதாகத் தெரிகிறது. ஆங்கில மொழி உலகம் பூராவும் அறிந்த பொது மொழியாகும். ஆங்கிலத்தில் 'மூன்று' என்பதைக் குறிக்கும் சொல்லான, 'த்ரீ' (Three) என்பது, வடமொழியில் மூன்று என்பதைக் குறிக்கும் சொற்களான, த்ரீணி, த்ருதீயம், த்ரையம், த்ருதியை ஆகிய சொற்களுடனும், ஹிந்தி மொழியில் மூன்று என்ணைக் குறிக்கும் சொல்லான (तीन) 'தீன்' என்பதுடனும் ஒலி உச்சரிப்பில் ஒற்றுமையையும், தொடர்பையும் உடையதாக உள்ளது என்பது தெரிகிறது. மலையாளமொழியில் மூன்றை, 'மூணு' என்றும், தமிழிலும்கூட பேச்சுத் தமிழில் 'மூணு' என்றே மூன்றைக் குறிக்கிறோம். தெலுங்கு மொழியில் 'மூடு' என்றும், கன்னட மொழியில், 'மூரு' என்றும் கூறுவதிலிருந்து மூன்று பல மொழிகளுடன் தொடர்புடையதாக உள்ளது என்று தெரிகிறது. தவிர பல மொழிகளில், மூன்றைக் குறிக்கும் எண்ணை ஆராய்ந்தால், அது ஒரே தாது (Root)விலிருந்து பிறந்திருக்க வேணும் என்று ஊகிக்க இடமளிக்கிறது. மொழி இயல் வல்லுனர்கள் இதனை நன்கு அறிவார்கள்.

இனி எல்லோரும் தெரிந்து இருக்கும் மூன்றின் தொகுப்பைப் பற்றி கூறுவோம் :

முதலாவதாக 'மூன்று' என்றால் நம் எல்லோருக்கும் நினைவு வருவது பின்வருவன:

1. ப்ரும்மா, விஷ்ணு, ருத்ரன் என்ற மும்மூர்த்திகளும்.

2. மும்மூர்த்திகளின் பத்னிகளான சரஸ்வதி, இலக்குமி, பார்வதியும் ஆகும்.

3. மூன்று சக்திகள் (இச்சா சக்தி, ஞானசக்தி, க்ரியா சக்தி).

4. மூன்று உலகம் (பூலோகம், சொர்க்க லோகம், பாதாள லோகம்).

5. மூன்று குணங்கள் (சத்வ குணம், ரஜோ குணம், தமோ குணம்).

6. முக்கனிகள் (மா, பலா, வாழை).

7. முத்தமிழ் (இயல், இசை, நாடகம்).

8. மூன்று மதாசார்யர்கள் (ஸ்ரீ சங்கரர், ஸ்ரீராமானுஜர், ஸ்ரீமத் வாசார்யர்).

9. மூவேந்தர்கள் (சேர, சோழ, பாண்டியர்).

10. மூன்று ருசிகள் (இனிப்பு, கசப்பு, காரம்).

11. மூவாசைகள் (பொன்னாசை, பெண்ணாசை, மண்ணாசை).

12. மும்மலங்கள் (ஆணவம், கன்மம், மாயை).

13. முச்செருக்கு (கல்விச் செருக்கு, செல்வச் செருக்கு, குலச் செருக்கு).

திரு. D. கேசவ ஐயங்கார்,
அல்லூர்.

14. முக்கரணங்கள் (மனம், வாக்கு, உடல்).

15. முப்படைகள் (தரைப்படை, ஆகாயப்படை, கப்பற்படை).

16. முக்காலம் (நிகழ்காலம், கடந்த காலம், எதிர்காலம்).

17. மூன்று நேரம் (முற்பகல், பிற்பகல், இரவு).

18. முப்பால் (அறத்துப்பால், பொருட்பால், காமத்துப்பால்) (ஆண்பால், பெண்பால், அலி).

19. சங்கீத மும்மூர்த்திகள் (தியாக ராஜர், முத்துஸ்வாமி தீக்ஷிதர், ஸ்யாமா சாஸ்திரி).

20. முக்கண்ணன் (சிவபிரான்).

21. முத்தோஷம் (வாதம், பித்தம், கபம்).

**இனி வேதாந்தத்தில் வரும் 'த்ரயங்கள்' (மூன்றை) பார்ப்போம் :**

1. ப்ரஸ்தானத்ரயம், 2. ஷட்கத்ரயம், 3. ரகஸ்யத்ரயம், 4. சுத்யத்ரயம், 5. ஆசாரத்ரயம், 6. ஈஷணத்ரயம், 7. தாபத்ரயம், 8. தீக்ஷாத்ரயம், 9. கக்ஷாத்ரயம், 10. தத்வத்ரயம், 11. ப்ரமாணத்ரயம், 12. சரமஸ்லோகத்ரயம், 13. பக்தித்ரயம், 14. நாரத பக்தி ஸூத்ரத்ரயம், 15. அவஸ்தாத்ரயம், 16. தாபத்ரயம், 17. குணத்ரயம், 18. சித்தாந்தத்ரயம், 19. கோலத்ரயம், 20. ஜீவத்ரயம், 21. அக்ஷரத்ரயம், 22. ஸித்தித்ரயம், 23. நாமத்ரயம், 24. பதத்ரயம், 25. யோகத்ரயம், 26. ருணத்ரயம்.

இன்னும் ஏதாவது விடுபட்டிருக்குமேயானால் அது என் அறியாமையாகும். மேலே கூறப்பட்டுள்ள த்ரயங்களின் தொகுப்புகளுக்கு (மூன்றின் தொகுப்பு) பொருள் விளக்கங்களும் விரிவுக்கு அஞ்சியே, சுருக்கமாகவே கொடுக்கப்பட்டிருக்கிறது.

**1. ப்ரஸ்தானத்ரயம் :**

வியாசரின் பிரம்மஸூத்ரம், உபநிஷத்துக்கள், பகவான் கண்ணன் தேர்த்தட்டிலிருந்து அருளிச் செய்துள்ள பகவத் கீதை ஆகிய மூன்றும் ப்ரஸ்தானத்ரயமாகும். (இவற்றிற்கு சுருக்கமாக விளக்கம் கொடுக்க முடியாதாகையாலே விளக்கம் கொடுக்கப் படவில்லை).

**2. ஷட்கத்ரயம் :**

பகவானான ஸ்ரீ கண்ணனால், பார்த்தனுக்கு உபதேசிக்கப்பட்ட 18 அத்யாயங்கள் கொண்ட 'பகவத் கீதை'யை, 6 அத்யாயங்கள் கொண்டது ஒரு ஷட்கம் என, 18 அத்யாயங்களையும், மூன்று ஷட்கங்களாக நம் முன்னோர் பிரித்துள்ளனர். பகவத் கீதையில் கர்மயோகம், பக்தி யோகம், ஞானயோகம் என்ற மூன்று யோகங்களைக் கண்ணன் கூறுகிறான். கீதையின் முதல் 6 அத்யாயங்களில், மஹாவாக்யத்தின் சொல்லான 'த்வம்' (நீ) என்ற பதத்திற்கு விளக்கமாக உள்ளது. ஜீவதத்வத்தை விளக்கி, ஜீவனிடத்தில் உள்ள குறைபாடு, அவன் அடைய வேண்டிய நிலை, எடுக்க வேண்டிய முயற்சி ஆகியவைகள் சொல்லப்படுகிறது. இரண்டாவது 6 அத்யாயங்களில், 'தத்' (அது) என்னும் பதத்திற்கு விளக்கமாக உள்ளது. பரதத்வம் விளக்கப்படுகிறது எனலாம். மூன்றாவது 6 அத்யாயங்களில் 'அஸி' (இருக்கிறாய்) என்னும் சொல்லுக்கு விளக்கம் உள்ளது. ஜீவாத்மாவுக்கும், பரமாத்மாவுக்கும் உள்ள தொடர்பையும் விளக்குகிறது.

**3. ரஹஸ்யத்ரயம் :**

மந்த்ர ராஜாவான திருமந்த்ரமாகிற, 'ஓம் நமோ நாராயணாய' என்கிற 'திருவெட்டெழுத்தும்', மந்த்ர ரத்னமாகத் திகழும் 'ஸ்ரீமந்நாராயண சரணௌ சரணம் ப்ரபத்யே ஸ்ரீமதே நாராயணாயநம:' என்கிற 'த்வயமும்', பகவத் கீதா சரமஸ்லோகமான 'ஸர்வதர்மான் பரித்யஜ்ய மாமேகம் சரணம் வ்ரஜ, அஹம் த்வா ஸர்வ பாபேப்யோ, மோக்ஷயிஷ்யாமி மாசுச:' என்கிற 'சரமஸ்லோகம்' ஆகிய மூன்றும் ரஹஸ்யத்ரயமாகும். (இவை விசிஷ்டாத்வைதிகளுக்கு முக்கியம்) (இதன் பொருள் சுருக்கம் ஸப்தகிரி இதழ்களில் வெளிவந்துள்ளது).

**4. கத்யத்ரயம் :**

ஸ்ரீமத் பகவத் ராமானுஜரால் இயற்றப்பட்ட, 'சரணாகதி கத்யம்' 'ஸ்ரீரங்க கத்யம்', 'வைகுண்ட கத்யம்' என்ற மூன்று க்ரந்தங்களும் சேர்ந்து, 'கத்யத்ரயம்' எனப்படும். பொதுவாக கத்யத்ரயங்கள் ஆளவந்தாரின் ஸ்தோத்ர ரத்னத்தை அடிப்படையாகக் கொண்டு ஏற்பட்டன எனலாம்.

**சரணாகதி கத்யம் :**

ஒரு பங்குனி உத்திர நாளிலே, பிராட்டியும்பெருமாளுமாகச்சேர்ந்து சேவை சாதிக்கும் போது, பிராட்டியை முன்னிட்டு பெருமாளை சரணமடைந்து துதித்தது சரணாகதி கத்யமாக ஆயிற்று எனலாம். பொதுவாக கத்யத்ரயங்கள் மூன்றுமே, த்வயத்தை விவரணம் செய்வதாக அமைந்துள்ளது.

**ஸ்ரீரங்க கத்யம் :**

இது பொதுவாக சரணாகதி கத்யத்தை ஒட்டியே அமைந்துள்ளது. பிராட்டியும் பெருமாளும் சேர்ந்து சேவை சாதிப்பதை விவரிப்பதாக கொள்ளலாம்.

**ஸ்ரீவைகுண்ட கத்யம் :**

இது உபேயத்தை விவரிக்கும் நூல் என்பர். அதாவது பகவானை அடைய அவனே உபேயமாக (அடையப்படும் பொருளாகவும்) இருக்கிறான் என்பதை விவரிக்கிறது. தவிர எம்பெருமான், அபராக்ருதமான நித்ய விபூதி என்னும் ஸ்ரீவைகுண்டத்தில், எழுந்தருளியிருப்பதைப் பற்றியும் விவரிக்கிறது என்பர்.

**5. ஆசாரத்ரயம் :**

உபாயம், உபேயம், புருஷாகாரம் ஆகிய மூன்றும், 'ஆசாரத்ரயமாகும்'. இவை மூன்றும் பெருமாளுக்கு இருப்பது போல், பிராட்டிக்கும் உண்டு. அவனை அடைய அவனே 'உபாயமாகவும் (அடைவதற்கான வழியாகவும்) அவனை அடைய அவனே 'உபேயமாகவும்' (அடையப்படும் பொருளாகவும்) இருப்பதுடன் ஜீவனுக்கும் ஈஸ்வரனுக்கும் இடையில் (கடகனாக) சேர்த்து வைப்பவளாக இருந்து, ஜீவன்களுடைய அபராதங்களை மன்னித்து, எம்பெருமானிடம் சேர்த்து வைக்கிறாள். இதே விதமாக ஆசார்

யனும் புருஷாகாரமாக இருந்து ஜீவன் களை பகவானிடம் சேர்த்து வைக் கிறார் (புருஷாகாரம் சிபார்சு செய் தல்).

6. ஈஷணத்ரயம் :

தாரேஷணை, புத்ரேஷணை, தனே ஷணை (பொதுவாக மண்ணாசை, பெண்ணாசை, பொன்னாசை) ஆகிய மூன்றும் ஈஷணைத்ரயமாகும்.

7. தாபத்ரயம் :

ஆதியாத்மிகம், ஆதிபௌதிகம், ஆதிதைவிகம் என்ற மூன்றும் தாபத் ரயமாகும்.

ஆதியாத்மிகம் என்பது தன்னைப் பற்றி வரும் துன்பமாகும். இதுவும் கூட 'சாரீரகம், மானஸம்' என இரு வகைப்படும். தன் உடலில் ஏற்படும் தலைவலி, ஜுரம் போன்றவை 'சாரீ ரகம்' எனப்படும். தன்னைச் சார்ந் தவர்கள் கஷ்டப்படுவதினாலோ, தன் பொருள்கள் இழப்பினாலோ, ஏற் படும் துன்பங்களும், தேவைக்குப் போதுமான, வருவாயில்லாமல் ஏற் படும் கவலைகளும், காமக்ரோதாதி களால் ஏற்படும் தாபங்களும் 'மானஸ மாகும்.'

ஆதிபௌதிகம் என்பது இதர மனி தர்களாலோ, பிராணிகளாலோ, பூத, பிசாசு முதலியவைகளால் ஏற் படும் துன்பங்களாகும்.

ஆதிதைவிகம் என்பது காற்று, மழை, வெயில், பனி முதலான மனித சக்திக்கு அப்பாற்பட்டு ஏற்படும் துன்பங்களாகும்.

8. தீக்ஷாத்ரயம் :

நயன தீக்ஷை, ஸ்பர்ஸ தீக்ஷை, வாக் (அனுக்ரஹ) தீக்ஷை ஆகிய மூன்றும், 'தீக்ஷாத்ரயம்' எனப்படும். ஆசார்யன் தன் சிஷ்யர்களுக்குப் பல வழிகளில் தீக்ஷை (அருள் பாலித்தல்) கொடுக்கிறார். இவைகளில் பார்வை யினாலேயே அருள் பாலித்தலுக்கு நயன தீக்ஷை என்பதாகும். ஸ்பர்ஸ தீக்ஷை என்பது குரு தன் சரீரத்தின் பாகங்களில் ஏதாவது ஒன்றினால் சீட னின் உடலைத்தொட்டு அருள் பாலிப் பதாகும். இங்கு ஸ்ரீராமானுஜர் ஒரு ஊமைக்கு அருள் பாலிக்க, தன் வலது திருவடியை அந்த ஊமையின் தலையில் வைத்து அருள் பாலித்தார் என்பது நினைவில் கொள்ள வேண்டியது. தவிர ஸ்ரீராமகிருஷ்ண பரமஹம் சரும் தன் முக்ய சீடரான விவே கானந்தரை கட்டித் தழுவி அருள் பாலித்தார் என்பதையும் நாம் நினை வில் கொள்ள வேண்டியது. ஆசார் யனிடமிருந்து வரும் உபதேசச் சொற்களைக்கேட்டமாத்திரத்திலேயே ஒருவனுக்கு ஞானம் ஏற்படுவதற்கு வாக்தீக்ஷை அல்லது அனுக்ரஹ தீக்ஷை எனப்படும். அதாவது குரு தான் இருந்த இடத்திலிருந்தே சீட னுக்கு அருள் பாலிப்பதாகும். இங்கு உதாரணத்திற்கு, ஸ்ரீ சங்கர பகவத் பாதாள் பத்மபாதருக்கு அருள் பாலித்தது அனுக்ரஹ தீக்ஷையாகும்.

9. கக்ஷாத்ரயம் :

கக்ஷாத்ரயம் என்பது 'ப்ரமாணம், ப்ரமாதா, ப்ரமேயம்' ஆகிய மூன்று கும். இவற்றில் 'ப்ரமாணம்' என் பது நம்மாழ்வாரின் திருவாய்மொழி

# குரு கடாக்ஷம்

முனிவர் சத்ய காமாவின் குரு குலத்தில் கல்வி பயின்றிட உப கோசலன் என்ற மாணவன் வந்து சேர்ந்தான். குருகுலத்தில் அவன் தங்கியிருக்கும் காலத்தில் பல மாணவர்கள் அங்குக் கல்வி பயில வந்தார் கள். குருவிடம் பல ஆண்டுகள் பாடம் கேட்டார்கள். கல்வி பயிற்சி முடிந்ததும் வீடு திரும்பினார்கள். எனினும் அது நாள் வரையில் குரு வின் கடாக்ஷம் உபகோசலனுக்குக் கிட்டவில்லை. எனினும் அவன் உள்ளம் உடைந்துவிடவில்லை. குருவுக்கும் குரு பத்தினியாருக்கும் தயங்காது தளராது தொண்டு புரிந்து வந்தான். மேலும் நாள் தோறும் குருவின் இல்லத்தில் விளங்கும் ஹோம குண்டங்களை முறையோடு ஆராதித்து மூவர்க்கினிகளை தொழுதுவந்தான். காலம் சுழன்றது. குருவின்பத்தினிக்கு சீடன்மீது இரக்கம் பிறந்தது. 'உரிய கல்விகளை அளித்து உபகோசலனை உயர்த்துங்கள்' என்று கணவனிடம் கோரிக்கை வைத்து வணங்கி நின்றாள். ஆயினும் குருவின் உள்ளம் கரையவில்லை. சீடனின் உறுதி யும் குறையவில்லை. இந்நிலையில் அச்சீடனுக்கு உதவிட அவன், நாள் தோறும் வணங்கி வரும் மூவாக்கினிகள் முன் வந்தார்கள். அவர்கள் மூவரும் ஓர் உருவாய் குரு உருவம் கொண்டு அச்சீடனுக்கு பிரம்ம வித்தைகளின் சாரம் அனைத்தும் புகட்டி மறைந்தார்கள். வீடு திரும்பிய முனிவர் தன் சீடனின் முகத்தில் பிரம்ம தேஜஸ் பிரகாசிப்பதைக் கண்டு உள்ளம் மகிழ்ந்தார். அதன் காரணத்தையும் எளிதில் கண்டறிந்தார். 'சீடனே! உன் கல்வி இன்றுடன் முடிவு பெற்றது. இனி நீ வீடு திரும்ப லாம்'என்றார். அவர் சீடன் குருவின் திருவடிகளில் வணங்கி எழுந்தான். 'ஐயனே! என் கல்வி முடிவுற்றது என்பதை ஏற்றுக்கொள்ளுகிறேன். ஆனால் குருவின் ஆசி பலம் இன்றி நான் அக்கல்வியின் பயனை அடைந்து விட முடியுமா? ஆசி தாருங்கள்!' என்றான் அவன். குருவின் உள்ளம் குளிர்ந்தது. மனமார வாயார ஆசிகளை வழங்கிச் சீடனுக்கு விடை கொடுத்தார்.

—ஆர். சுப்பராவ்-திருக்கோவலூர்.

ஆரம்பத்தில், 'சுடர் மிகு சுருதி' என்று போற்றப்படும் வேதங்களே நமக்கு ப்ரமாணம். ஞானக் கடல்களாக விளங்கிய ஸ்ரீமந்நாத முனிகள், ஆளவந்தார், ஸ்ரீராமானுஜர் போன்ற மஹாதாசார்யர்களே ப்ரமாதா எனப்படுவர். ப்ரமேயம் என்பது ஸர்வ ஜீவராசிகளுக்கும், சேதனு சேதனப் பொருள்களுக்கும் தான் சரீரமாகவும், ஆத்மாவாகவும் இருந்து (சரீரி சரீர பாவம்), அனந்த கல்யாண குணங்களோடு கூடிய ஸ்ரீமந்நாராயணனே பரத்வம் என்றும், அவன் திருவடிகளில் செய்யும் ப்ரபத்தியே (சரணுகதி) பரம ஹிதம் என்றும், பகவானுக்கும், பாகவதர்களுக்கும் செய்யும் கைங்கர்யமே புருஷார்த்தம் என்று கூறும் அர்த்த விசேஷங்களே ப்ரமேயம் எனப்படும். இவை மூன்றும் விசிஷ்டாத் வைதிகளுக்கு முக்யமானது.

**10. தத்வத்ரயம் :**

விசிஷ்டாத்வைத ஸித்தாந்தத்தின் படி, 'சித், அசித், ஈஸ்வரன்' என்பன மூன்று தனித் தத்வங்களாகும். இங்கு 'சித்' அல்லது சேதனன் என்பது ஜீவாத்மாவைக் குறிக்கும். சேதனம் என்ருல் அறிவு அல்லது ஞானம் எனப்படும். நித்யத்வமும், சேதனத்வமும் ஜீவன், ஈஸ்வரன் ஆகிய இருவருக்கும் பொதுவான குணமாகும். இவ்விரு தத்வங்களையும் 'நித்யன் சேதனன்' என்ற பெயரால் அழைக்கலாம் என்பதை 'நித்யோ நித்யாஞம் சேதன: சேதனுனும் ஏகோ பஹூனும்' என்று 'கடோபநிஷத்' வாக்யம் தெரிவித்தாலும், விசிஷ்டாத்வைதஸித்தாந்தத்தில் 'ஈஸ்வரன்' என்று தனித்துப் பேசப்படுவதால், இங்கு 'சித்' என்பது ஜீவாத்மாவையே குறிக்கும் என்பர் நம் பெரியோர். 'அசித்' அல்லது அசேதனம் என்ருல் அசையாப் பொருள், அறிவில்லாதது என்றும் ஜடம் என்றும் கூறலாம். அசித் அல்லது அசேதனம் என்பது ப்ருக்ருதி, காலம், சுத்தஸத்வம் என்று மூன்று வகையாக இருக்கும். இதன் விளக்கம் விரிவுக்கு அஞ்சி இத்துடன் விடப்படுகிறது.

ஈஸ்வரன் என்பது ஆதியும், அந்தமும் இல்லாததாய், உலகிலுள்ள சகல ஜீவராசிகளுக்கும், முதற்காரணமாயும் 'மூர்த்தம், அமூர்த்தம்' என்ற நிலைகளை உடைய பரப்ரம்மமாகும். இதுவே மூர்த்த நிலையில் விசிஷ்டாத்வைதத்தில் 'ஸ்ரீமந்நாராயணன்' என்று கூறப்படுகிறது. ஈஸ்வர தத்வத்தைப் பற்றிப் பேசும்போது, பரப்ரம்மமே, ரஜோ குணத்துடன், 'விஷ்ணுவாக' இருந்து ரக்ஷணத்தை (காத்தல்) செய்கிருன் என்றும், தமோ குணத்துடன் 'ஸ்ரீருத்ரனுக' இருந்து ஸம்ஹாரத்தைச் செய்கிருன் என்றும் கூறுவதுண்டு. இதனை இன்னும் விவரித்தால் வளரும் என்று இத்துடன் நிறுத்திக் கொள்ளப்படுகிறது. (இதுவும் விசிஷ்டாத்வைதிகளுக்கு உரியதாகும்)

**11. ப்ரமாணத்ரயம் :**

தத்வம் என்ற சொல், 'உண்மையான பொருள்' என்னும் அர்த்தத்தைக் கொடுக்கும். உண்மையான பொருளை நாம் உள்ளபடி அறிந்து கொள்வதற்கு உதவியாக இருக்கும் சாதனம் ப்ரமாணம் எனப்படும். இந்த ப்ரமாணம் என்பது, 'ப்ரத்யக்ஷ ப்ரமாணம்', 'அனுமானப்ரமாணம்', 'சப்தப்ரமாணம்' என்று மூன்று வகைப்படும்.

'ப்ரத்யக்ஷப்ரமாணம்' என்பது ரூப, ரஸ, கந்த (வாஸனை) ஸ்பர்ஸ ஸப்தங்களையும், சுக துக்கங்களையும், அறிவதற்குக் காரணங்களாக இருக்கும் கண், காது, நாக்கு, மூக்கு, மெய் (உடல்) ஆகிய ஐந்து இந்திரியங்களும், 'மனஸ்' என்பதைச் சேர்த்து ஆக இந்திரியங்கள் ஆறு ஆகும்.

**அனுமானப்ரமாணம் :**

அனுமானப்ரமாணம் (ஊகம்) என்பது ப்ரத்யக்ஷப்ரமாணத்தினுல் வஸ்துக்கள் ஒன்றை விட்டு ஒன்று பிரியாமலிருக்கிற நிலையை நன்ருக அறிந்து கொள்வதற்குக் காரணமாக அமைந்திருக்கும் புத்தியுக்தியாகும்.

**சப்தப்ரமாணம் :**

சப்தப்ரமாணம் என்பது சொல் வழியாகும். அதாவது ப்ரத்யக்ஷ, அனுமானப்ரமாணங்களினுல் அறிய முடியாதபடி இருக்கும் 'பகவான்', 'பகவத்ஸ்வருபம்', 'வேதாந்தம்' முதலியவைகளைத் தெரிவிக்கும் வேத இதிஹாஸ புராணங்களும், ஆழ்வார்களின் அருளிச் செயல்களுமாகும்.

**12. சரமஸ்லோகத்ரயம் :**

சரமஸ்லோகம் என்பது முடிவான வார்த்தை, அறுதியிடப்பட்ட பொருள் என்பதாகும். 'ஸ்திதே மனஸி ஸுஸ்வஸ்தே சரீரேஸதி யோநர: தாது ஸாம்யே, ஸ்திதே ஸ்மர்த்தா விஸ்வருபஞ்ச மாமஜம் ததஸ்து ம்ரியமாணந்து, காஷ்ட பாஷாண ஸந்நிபம், அஹம் ஸ்மராமிமத்பக்தம், நயாமி பரமாங் கதிம்' என்ற வராஹ சரமஸ்லோகமும், 'ஸக்ருதேவ ப்ரபன்னுய தவாஸ்மீதி ச யாச்தே! அபயம் ஸர்வ பூதேப்யோ ததாமே யேதத் வ்ரதம் மம', என்ற ராமாயண சரமஸ்லோகமும், 'ஸர்வதர்மான் பரித்யஜ்ய மாமேகம் சரணம் வ்ரஜ, அஹம் த்வா ஸர்வ பாபேப்யோ மோக்ஷயிஷ்யாமி மாசுச:' என்ற கீதா சரமஸ்லோகமுமாகும்.

**வராஹ சரம ஸ்லோகத்தின் பொருள் சுருக்கம்:**

வராஹ அவதாரத்தில் பகவான் பூமிப்ராட்டியிடம் கூறியதாகும். 'என்னிடத்தில் சரணுகதி செய்தவனின் மரண காலத்தில், தன் நினைவையிழந்து, கல்லைப்போலவும், கட்டையைப் போலவும் கிடக்கும் போது, நான் அவனை நினைத்து, அவனை உயர்ந்த கதிக்குக் கொண்டு சேர்க்கிறேன்' என்பதே. ஸ்ரீமத் ராமாயண சரமஸ்லோகத்தின் பொருள் சுருக்கம் ஸ்ரீமத் ராமாயணத்தில், சக்ரவர்த்தி திருமகனுல், விபீஷண சரணுகதியின்

(37-ஆம் பக்கம் பார்க்க)

# தமிழ் நாட்டில் வைணவம் - தோற்றமும் வளர்ச்சியும்

**பக்தி நெறியில் மாட்சி :**

இந்தியப் பண்பாட்டின் சிகரமாக விளங்குவது பக்தி நெறி; அன்பே வடிவாக விளங்குகின்றான் இறைவன். அவனை அடைவதற்குக் கானகம் சென்று காய் கனி தின்று கடுந்தவம் புரிந்து அல்லற்பட வேண்டா.

"ஊன்வாட உண்ணாது உயிர் காவலிட்டு
உடலிற் பிரியாப் புலன் ஐந்தும்
நொந்து
தாம்வாட வாடத் தவம் செய்ய
வேண்டா"

(நா. திவ். 1158)

எனவும்,

"பொருப்பிடையே நின்றும் புனல்
குளித்தும் ஐந்து
நெருப்பிடையே நிற்கவும் வேண்டா?-
விருப்புடைய
வெஃகாவே சேர்ந்தானை மெய்ம்
மலர்த் தூய்க் கை தொழுதால்,
அஃகாவே தீவினைகள் ஆய்ந்து"

(நா. திவ். 2357)

எனவும் தமிழகத்தில் தோன்றிய அருளாளர்கள் மக்களுக்கு அறிவித்தனர். உள்ளத்தே உறையும் இறைவனை, வழிபடுவதற்குரிய பக்தி நெறியை அருள்நெறிச் சான்றோர்களான ஆழ்வார்கள் இரண்டாக வகுத்தனர். ஒன்று திருக்கோயில் வழிபாடு; மற்றொன்று ஆன்ம வழிபாடு. இவ்விரண்டும் இணைந்த ஒன்றாகவே, ஆழ்வார்கள் வளர்த்த வைணவம் காட்சி தருகிறது. இதனாலேயே வைணவம், கடவுள் நெறியோடு இணைந்து தொண்டு நெறியாகப் பெருவாழ்வு பெற்றுள்ளது.

**ஆழ்வார்களின் அருளிச் செயல்கள் :**

தமிழ் நாட்டு வைணவச் சமயத்தின் தலையூற்றாக, வேதமாக விளங்குவன ஆழ்வார்களின் அருளிச் செயல்கள். பக்தி உணர்வு பொங்கி வழியும் ஆழ்வார்களின் அருட்பாடல்களான நாலாயிர திவ்வியப்பிரபந்தம் அக்கால வைணவத்தின் கொள்கைகளையும், வழிபாட்டு முறைகளையும் அறிந்து கொள்ளுவதற்குரிய ஆதாரமாக விளங்குகின்றன. பன்னிரு ஆழ்வார்கள் பாடியருளிய பாசுரங்களின் தொகுதியாகத் திவ்வியப் பிரபந்தம் விளங்குகிறது. அவற்றின் நோக்கையும், போக்கையும் புரிந்து கொள்ளுவோமானால் அக்காலத்தில் வைணவ சமயம் அடைந்திருந்த வளர்ச்சியையும், சாதித்த சாதனைகளையும் நன்கு கணிக்க இயலும்.

பரந்துபட்ட சமஸ்கிருத ஆகமங்களும், புராணங்களும், இதிகாசங்களும், ஆழ்வார்களுக்குப் பக்திக் கண்ணோட்டத்தில் தத்துவங்களையும் சமயத்தையும் ஆராய்ந்து தெளியவும், புதிய கொள்கைகளை உருவாக்கவும் பேருதவியாக இருந்தன. இவற்றோடு பண்டைத் தமிழ் இலக்கிய மரபுகளும் அவர்களுக்கு உறுதுணையாக இருந்தன. தங்களுக்குக் கிடைத்த பரந்துபட்ட கருத்துகளைப் பயன்படுத்தி முன்னரே அரும்பி இருந்த வைணவ சமயக் கருத்துக்களைக் கொண்டு, வைணவ இறைமைக் கோட்பாட்டை முழு வளர்ச்சி உடையதாக ஆழ்வார்கள் மாற்றி அமைத்தனர். ஆனால், அதனை முறைப்படுத்தப்பட்ட ஒரு சிந்தனை அமைப்பாக அவர்கள் வரையறுக்கவில்லை.

நாராயணனையே அவர்கள் முழு முதற் பொருளாகக் கொண்டனர். விஷ்ணு,வாசுதேவன், மாயோன், திருமால் எனும் பெயர்கள் உணர்த்திய கருத்துகள் அனைத்தும் இணைந்த நிலையில் எல்லாவற்றிற்கும் மேலான பரம் பொருளாக நாராயணனை மதித்துப் போற்றினர்.

"நான்முகனை நாராயணன் படைத்
தான் நான்முகனும்
தான்முகமாய்ச் சங்கரனைத் தான்
படைத்தான்"

(நா. திவ். 2382)

'தேருங்கால் தேவன் ஒருவனே...' (ஷெ. 2383) என்பதனால் இதனைத் தெளியலாம். மேற்கண்ட அடிகளில் திருமூர்த்திகளுள் நாராயணனும் ஒருவர் என்பதும், மற்ற இருவரைக் காட்டிலும் மேம்பட்டவர் என்பதும் எடுத்துரைக்கப்பெற்றுள்ளன.

வராக அவதாரம் எடுத்து, நில மகளை மீட்டுக் கொண்டு வந்தவர் திருமால். இதன் விளைவாக பூமகளை மனைவியாகப் பெற்றார் என்பது புராணக் கருத்து. இதனை ஆழ்வார்கள் அப்படியே ஏற்றுப் போற்றியுள்ளனர். இதற்கு மேல் ஒருபடி சென்று பூமகளை மலர்மகளோடு ஒப்ப வைத்துத் திருமாலின் மனைவியர் அனைவரும் சமம் எனும் கருத்தை ஆழ்வார்கள் நிலைநாட்டியுள்ளனர்.

பேராசிரியர். க. த. திருநாவுக்கரசு.
சென்னை.

"தேவிமா ராவார் திருமகள்; பூமி
யேவமற்று அமரர் ஆட்செய்வார்"

(நா. திவ். 3447)

என்பது நம்மாழ்வாரின் கருத்தாகும்.

தமிழ் மரபு மற்றும் ஒரு தேவியைத் திருமாலின் துணைவியாக்கத் தூண்டியது. நப்பின்னை எனும் ஆய குல மகளையும் சேர்த்து 'இறைவனுக்கு

மூன்று தேவியர்' என்ற ஆழ்வார்கள் அறிவித்தனர்.

"இன்துணை பதுமத்து அவர்மகள்
தனக்கும்
இன்பம்; நற் புவிதனக்கு
இறைவன்;
தன்துணை ஆயர் பாவைநப் பின்னை
தனக்கு இறை"

என்னும் பாடற் பகுதி இதற்குப் போதிய சான்றாகும்.

கார்மேக வண்ணனாகிய திருமாலின் கோலத்தையும் சங்கு சக்கரப் படைகளையும் அடிக்கடி ஆழ்வார்கள் பரவசத்தோடு பாடியுள்ளனர். இதன்மூலம் இறைவன் காட்சிக்கு எளியனாகவும் அடியார்கள் திருமுன் அடைவதற்கு அன்புடன் அருள்புரிபவனாகவும் உள்ள திறத்தைத் தெளிவுறுத்த முயன்றுள்ளனர்.

"சேயன்; அணியன்; என்சிந்தையுள்
நின்ற மாயன்"

(நா. திவ். 10.45)

என்பதனைக் கருதுக.

திருமாலைப் பத்துத் திருநாமங்களைக் கொண்டு போற்றிப் பரவுவதை ஆழ்வார்கள் அடிக்கடி செய்துள்ளனர். திருவாய்மொழியின் இரண்டாவது பகுதி ஏழாவது பிரிவிலுள்ள பாடல்கள் ஒவ்வொன்றும் கேசவன், நாராயணன், மாதவன், கோவிந்தன், மதுசூதனன், திருவிக்கிரமன், வாமனன், கிரீதரன், இருடிகேசி, தாமோதரன் எனும் திருப்பெயரோடு தொடங்குகின்றன.

வேதங்களால் கண்டறிய இயலாதவன் திருமால். ஆனால் வேதங்களிலே இறைவனைக் காணலாம் என்பதைத் திரும்பத்திரும்ப எடுத்துரைத்துள்ளனர். இதனால் தங்கள் பாசுரங்களும் வேதத்தோடு ஒப்பவைத்துப் போற்றத்தக்கன என்று அவர்கள் கருதினர் போலும்.

"அமரர்கள் தம் தலைவனை அந்தமிழ்
இன்பப்
பாவினன், அவ் வடமொழியை...
......நாவுற வழுந்தி"

(நா. திவ். 650)

என இரண்டினையும் இணைத்துப் பாடியுள்ளனர்.

இறைவனுடைய திருக்கல்யாண குணங்களை எடுத்துரைப்பதில் ஆழ்வார்கள் ஆர்வம் காட்டவில்லை. அவனை எளிதில் அடையக் கூடிய நிலையையும், எளிதில் நமக்குக் கிடைக்கக் கூடிய திருவருள் பேற்றினையுமே அவர்கள் காதலாகி, கசிந்துருகிப் பாடியுள்ளனர். உயிர்களிடத்து இறைவன் கொண்டுள்ள அன்பு (வாத்சல்யம்) பெற்றோரின் அன்பைப் போன்றது என்பதைப் பல பாசுரங்களில்எடுத்துரைத்துள்ளனர்.

திருமால், அன்பர்களின் துன்பத்தைத் துடைக்க அவ்வப்போது அவதாரங்கள் எடுத்துப்பல்வேறு வீரதீரச் செயல்களைச் செய்தமையை அவர்கள் வியந்து போற்றியுள்ளனர். தம்முடைய அடியார்களுக்கு அருள் பாலிக்க இறைவன் காட்டும் கருணைத் திறத்தின் பேராற்றலை அவர்கள் வியந்து பாடியுள்ளனர்.

இதனால் இறைவன் எடுக்கும் ஐந்து வகை வடிவங்களுள் அவதாரங்களுள் (விபவ) அர்ச்சை வடிவங்களே ஆழ்வார்களின் உள்ளத்தைப் பெரிதும் கவர்ந்து இருக்கின்றன. இந்த வடிவங்களை ஆழ்வார்கள் வழிபடுவதற்கு அணுகும் முறை, ஐந்து வகை தோற்றங்களும் இணைந்த ஒரு புது நெறியாகவே காணப்படுகின்றது.

"விண்மீது இருப்பாய்; மலைமேல்
நிற்பாய்! கடல் சேர்ப்பாய்!
மண்மீது உழல்வாய்! இவற்றுள்
எங்கும் மறைந்து உறைவாய்!
என்மீது இயன்ற புறவண்டந்தாய்!
எனதாவி,
உன்மீது ஆடிஉருக்காட் டாதே ஒளிப்
பாயோ?"

(நா. திவ். 3319)

எனும் பாடல்களில் ஐவகை இயல்புகளும் ஒருங்கே அமைந்திருத்தலைக் காணலாம்.

பழந்தமிழ் இலக்கியத்துள் இடம் பெற்ற குருந்த மரத்தை வளைத்தது, குடக்கூத்து ஆடியது போன்ற வீரதீரச் செயல்களை எல்லாம் ஆழ்வார்கள் பாடியுள்ளனர். திருமாலிடம் கொண்ட பேரீடுபாட்டால் உந்தப்பட்டு பக்திப் பரவசத்தால் உளங் கனிந்த பொழுதெல்லாம் ஆழ்வார்கள் உவந்து பாடியுள்ளனர். அப்பாசுரங்களின் உயிர்த்துடிப்பும், கருத்துச் செறிவும் இனிய ஓசை நலமும் தமிழின் இனிமையை மிகுதிப் படுத்தியுள்ளன. இறைவனை அடைய வேண்டும் எனும் தீராக் காதல் மிகுந்த ஏக்கத்தோடு, அனுபூதித் தன்மையை அனுபவித்து மெய்யுணர்வு பெற்றவர்களாய் அவர்கள் விளங்குகின்றனர். அவர்கள் இறைவனிடம் கொண்ட காதல் பல நிலைகளையுடையதாகும். தாய் அன்பு மேலீட்டால், இறைவனைக் குழந்தையாகக் கருதிப் பாலூட்டி, சீராட்டி, தாலாட்டி, வளர்க்கும் பணியில் பெரியாழ்வார் ஈடுபட்டுள்ளார்.

"போதைக் குழவிப் பிடித்துச் சுவைத்
துண்ணும்
பாதக் கமலங்குள் காணீரே!

(நா. திவ். 23)

"மாணிக்கங் கட்டி வயிர மிடைகட்டி
ஆணிப்பொன் னால் செய்த
வண்ணச் சிறு தொட்டில்
பேணி உனக்குப்பிரமன் விடுதந்தான்
மாணிக் குறளனே தாலேலோ"

(நா. திவ். 44)

என்பன போன்ற பல பாடல்களைக் காட்டலாம். மகனைப் பிரிந்த தாய்மார்களான தேவகி, கோசலை ஆகியோர் அடைந்த துயரும், தசரதன் பட்ட துன்பமும் உருக்கமுடன் பாடப்பட்டுள்ளன. (நா. திவ். 708-740).

இதற்கு அடுத்த நிலையில் ஆழ்வார்கள் காதல், நாயகன்பால் நாயகி

கொண்ட காதலாக வெளிப்படுகின்றது. திருமாலை நாயகனாகவும் தங்களை நாயகியாகவும் பாவனை செய்து ஆழ்வார்கள் பாடியுள்ள பாசுரங்கள் (விரக பக்திக்குச்) சிறப்புமிக்க எடுத்துக்காட்டுகளாக அமைந்துள்ளன. இதனை 'பிரேம-பக்தி' என வடநாட்டு அறிஞர்கள் போற்றுகின்றனர்.

ஆழ்வார்கள் திருமாலிடத்துக் கொண்ட முறுகிய பக்தியே அவர்கள் பாசுரங்களில் காதலாகக் கனிந்து காணப்படுகிறது. வியப்பும் புதிரும் நிறைந்ததாய் அவர்கள் காதல் வெளிப்பட்டது.

இதனை 'பெய்யுணர்வுக் காதல் நெறி' என்பர். (P. N. Srinivasachari, The Mysticism of the Alvars, p. 48). இறைவனை அடைவதற்குரிய நெறிகளுள் 'காதல் நெறி' ஒரு வழியாகப் போற்றப்பட்டது. பண்டைத் தமிழ் இலக்கிய மரபு வழி வந்த 'அகப் பொருள்' நெறியைப் புறக்கணிக்க விரும்பாத அடியார்கள், அந்தக் காதல் நெறியின் உணர்வுகளை மடைமாற்றம் செய்தனர். மண்ணக மக்களின் காதலைச் சிறிது மாற்றி, மண்ணகத்து அன்பன், விண்ணகத்து இறைவனைக் காதலிப்பதாக அதனை அமைத்தனர்.

இந்த நெறியில், தலைவியாகிய பக்தன் ஆன்மா யான், எனது, என்னும் பற்றுக்களைத் துறந்து, 'எல்லாம் அவனே' எனும் மெய்யுணர்வினைப் பெறும்; அப்பொழுது 'உண்ணும் சோறு பருகுநீர் தின்னும் வெற்றிலை எல்லாம் கண்ணன்; எம்பெருமான் என்றென்றே' (நா. திவ். 3293) என்னும் உண்மையான மெய்யுணர்வு பெற இயலும் என்று அருளாளர்கள் நம்பினர்.

வைணவ சமய அருளாளர்களான திருமங்கையாழ்வார் பாடிய சிறிய திருமடலும், பெரிய திருமடலும், நம்மாழ்வார் இயற்றியுள்ள பாசுரங்களில் பலவும் (திருவாய்மொழி, திருவிருத்தம்) மெய்யுணர்வுக் காதல் நெறியை வளர்த்த பேரின்ப இலக்கியங்களாகும்.

'மடலேறுதல்' என்பது பண்டைத் தமிழ் இலக்கிய மரபில், காதலியை அடைய இயலாத தலைவன் செய்யும் செயலாகும். திருமங்கை மன்னன், 'வீரகதாபத்தால்' துடிக்கும் தலைவி மடலேறப் போவதாக அச்சுறுத்துவதைப் பாடியுள்ளார். இதற்கு,

"மன்னும் வடநெறியே வேண்டினோம்"

(நா. திவ். 2674.39)

எனும் காரணத்தையும் அவர் காட்டுகிறார்.

கார்மேக வண்ணனாகிய திருமாலிடம் தீராக் காதல் கொண்ட காரிகை ஒருத்தி தன் பிரிவாற்றாமைப் புலப்படுமாறு,

"மேகங்களே! உரையீர்! திரு மால்மேனி
யொக்கும்
யோகம் உங்களுக்கு எவ்வாறு பெற்
றீர்? உயிரளிப்பான்
மாகங்கள் எல்லாம் திரிந்துள்ளநன்
னீர்கள் சுமந்து நுந்தம்
ஆகங்கள் நோவ வருந்தும்தவ மாம்
அருள் பெற்றதே!"

(நா. திவ். 2509)

என்று திருமாலின் கரிய வண்ணத்தை மேகங்கள் பெற்ற வரலாற்றைக் கூறுமாறு வேண்டுகிறாள் தலைவி. இப்பாடலில், நம்மாழ்வாரின் ஆன்மீக ஏக்கத்தின் எதிரொலியைக் கேட்கின்றோம்.

திருவரங்கனையே கணவனாக அடைய தவமிருந்த ஆண்டாள், காதல் நோயால் துன்புற்றுப் பாடியுள்ள பாடல்களும் இந்த 'மெய்யுணர்வுக் காதல்' நெறியைப் புலப்படுத்துவனவாகும்.

ஆழ்வார்கள் திருமாலின் திருவடிகளை வணங்கினர். நெடு நேரம் அவற்றைத் தம் தலைமீது சூட்டிக்கொள்ள விரும்பினர். இதன் மூலம் அவனுடைய தோழனாக இருப்பதைவிட அடிமையாகப் பணிபுரிவதையே அவர்கள் விரும்பியதைத் தெரிவித்துள்ளனர். 'அடியரை யுகத்தி போலும் அரங்கமா நகருளானே!' (நா. திவ். பிர. 910) என்பதனால் இதனை அறியலாம். 'படியாய்க்கிடந்து நின் பவளவாய் காண்பேனே?' எனும் குலசேகரரின் பாசுரங்கள் நினைவு கூரத்தக்கவை.

கையிலங்கு ஆழி சங்கம்
கருமுகில் திருநி றத்தன்
பொய்யிவன்; மெய்யன்; தன்தாள்
அடைவரே அடிமையாக்கும்.

(நா. தி. 1428)

எனும் பாடலைக் காண்க.

வழிபடு தெய்வமாகிய அர்ச்சாவதார மூர்த்திகளின் வடிவத்திலும், வண்ணத்திலும், அமைப்பிலும், அழகிலும் அவர்கள் தோய்ந்து மெய் மறந்து போயினர். அத்தெய்வத் திருமேனிகளைக் கண்டவுடனே, உள்ளத்தில் பக்தி உணர்வு ஊற்றெடுக்கத்தொடங்கியது: குறிப்பிட்ட ஓர் அர்ச்ச வடிவிலேயே திருமாலின் பல்வேறு செயற்கருஞ் செயல்களை நினைந்து, போற்றி வழிபாடு செய்யத் தொடங்கினர். அந்த வடிவங்களின் சிற்பக் கலையழகில் தங்கள் கருத்தினைச் செலுத்தி, முடி முதல் அடி வரை நுட்பமாகத் தரிசிக்கும் பரவசம் அடைந்த நிலையில், தாங்கள் பெற்ற பேரின்பத்தைச் சொல்லோவியமாகத் தீட்டியுள்ளனர்.

"பச்சைமா மலைபோல் மேனி
பவளவாய் கமலச் செங்கண்
அச்சுதா! அமரர்ஏறே!
'ஆயர்தம் கொழுந்தே! என்னும்
இச்சுவை தவிர, யான் போய்
இந்திர லோகம் ஆளும்
அச்சுவை பெறினும் வேண்டேன்!
அரங்கமா நகரு ளானே!

(நா. திவ். 873)

இத்தகைய பேரின்ப அனுபவ எக்களிப்பைப் பல பாசுரங்களில் காணலாம்.

இராம, கிருஷ்ண அவதாரங்களில் ஆழ்வார்களுக்குப் பேரீடுபாடு இருந்தது. மாவீரர்களாகச் செயற்கருஞ் செயல்களைச் செய்து, தம் அடியவர்களின் துன்பத்தைப் போக்கி, இம்மை இன்பமும், மறுமைப் பேறும் அருளுவதில் அவர்கள் வல்லவர்கள் என ஆழ்வார்கள் கருதினர்; தங்கள் பக்திப் பெருக்கை, உள்ளத்தை உருக்கும் இனிய பாடல்கள் வாயிலாக அவர்கள் வெளிப்படுத்தினர்.

"பாருண்டான்; பார் உமிழ்ந்தான்; பார்
இடந்தான்; பார் அளந்தான்;
பாரிடம் முன்படைத்தான் என்பரால்-
பாரிடம்
ஆவானும் தான்" *(நா. திவ். 2626)*

இவ்வாறு திருமாலைப் போற்றும் ஆழ்வார்கள், அவனுடைய பரத்துவத்தையும் அந்தர்யாமி இயல்பையும் இடையிடையே நினைவு கூர்ந்துள்ளனர்.

"பொன்னானாய்! பொழில் ஏழும்
காவல்பூண்ட
புகழானாய்! இகழ்வாய் தொண்ட
னேன் நான்;
என்னானாய்? என்னானாய்? என்னல்
அல்லால்
எனஅறிவேன் ஏழையேன்?"
*(நா. திவ். 2061)*

எனவும்,

"உளன்கண்டாய் நன்னெஞ்சே!
உத்தமன் என்றும்
உளன்கண்டாய் உள்ளுவார் உள்ளத்து
உளன் கண்டாய்"
*(நா. திவ். 2321)*

எனவும் பாடியுள்ளமையால் இதனை அறிகிறோம்.

மூவகை மந்திரங்களைப் பற்றியும் அவற்றை ஓதுவதனால் கிடைக்கக் கூடிய பயனைப் பற்றியும் ஆழ்வார்கள் அறிவுறுத்தியுள்ளனர். இம்மந்திரங்களை அவர்கள் எடுத்துரைக்கும் முறையில் இருந்து அவர்கள் காலத்திற்கு முன்பே அவை ஆன்றோர்களால் வழங்கப்பட்டு இருக்க வேண்டும் எனத் தோன்றுகிறது.

"நாடினேன் நாடி நான் கண்டு
கொண்டேன்
'நாராயணா' என்னும் நாமம்"
*(நா. திவ். 948)*

என்னும் பாடலில் திருமங்கை மன்னன், நான்கு எழுத்து மந்திரத்தை ஓதியுள்ளார்.

"அயல்நின்ற வல்வினையை அஞ்சி
னேன்; அஞ்சி
உயநின் திருவடியே சேர்வான்-
நயநின்ற
நன்மாலை கொண்டு 'நமோ நாரணா'
என்னும்
சொன்மாலை கற்றேன் தொழுது"
*(நா. திவ். 2138)*

எனும் பொய்கையார் பாசுரத்தில் ஐந்து எழுத்து மந்திரம் சுட்டப்படுகிறது.

"நங்கள் வினைகள் தவிர உரைமின்
நமோநா ராயணமே!"
*(நா. திவ். 1546)*

என்பது ஏழு எழுத்து மந்திரம். மூலமாகிய ஒற்றை எழுத்து மந்திரத்தை ஓதுவதிலும் அவர்கள் ஆர்வம் கொண்டு இருந்தனர். *(நா. திவ். 374).*

இந்த மந்திரங்களை ஓதுவார் பிறவிப் பிணி அறுத்து வீடு பேறு அடைவர் எனும் அறிவுரையை ஆழ்வார்கள் கூறியுள்ளனர்.

"சொல்லுந் தனையும் தொழுமின்;
விழுமி உடம்பு,
செல்லும் தனையும் திருமாலை!-
நல்லிதழ்த்
தாமத்தால், வேள்வியால், தந்திரத்
தால், மந்திரத்தால்
நாமத்தால் ஏத்துதிரேல் நன்று"
*(நா. திவ். 2151)*

இந்த மந்திரங்கள் பிற்காலத்தில் வைணவ சித்தாந்தத்தை உருவாக்க உதவின. மனிதர், உலக வாழ்வில் படும் துன்பங்களையும், அனுபவிக்கும் அல்லல்களையும் ஆழ்வார்கள் நன்கு உணர்ந்து இருந்தனர். மக்கள் துன்பத்தைத் தங்கள் துன்பமாகக் கருதி, அவற்றை நீக்கவும் போக்கவும் வழி வகைகளைக் காண முயன்றனர். அவற்றுள் தலையாய வழி இறைவனுடைய திருவடிகளைச் சரண் அடைதலே என்பதை அவர்கள் அறிவுறுத்தியுள்ளனர்.

"சரணமா கும்தனது தாள் அடைந்தார்
க்கு எலாம்
மரணம் ஆனால் வைகுந் தம் கொடுக்
கும்பிரான்"
*(நா. திவ். 3660)*

இறைவனோடு கலந்து இன்புறும் பேரின்ப அனுபவத்தைப் பெற்ற ஆழ்வார்கள் அவ்வின்பத்தைத் தொடர்ந்து பெறுவதற்குத் துடித்தனர். மனித உடல், அதற்குத் தடையாக இருந்தது. என்றாகிலும் ஒரு நாள் அது அழிந்து விடும் என்பதனை அறிந்து இருந்தனர். இதனால், தடையில்லாமல் தொடர்ந்து திருமாலுடைய திருவருட்பேருகிய பேரின்பத்தில் திளைப்பதற்காகவே, மரணத்தையும் கடந்த ஒரு வாழ்க்கையை-ஒரு வைகுந்த வாழ்வைப் பெற அவர்கள் ஏங்கித் தவித்தனர்.

இத்தகையச் சிறப்பியல்புகள் ஆழ்வார்களின் அருளிச் செயல்களில் இழையோடிச் செல்லுகின்றன. இவற்றோடு மற்றொரு புதுமைப் போக்கினையும் அவர்களுடைய பாசுரங்களில் காணுகின்றோம். தொண்டர்களைப் போற்றுவதும் தொண்டர்களுக்குச் சேவை செய்வதும் சிறந்த பகவத் கைங்கரியமாகக் கருதப்பட்டது.

திருமாலின் தொண்டர்களுடைய பாததூளி படுவதே உலகம் செய்த நற்பேறு என்று ஆழ்வார்கள் நம்பினர்.

(36-ம் பக்கம் பார்க்க)

புண்ணிய நகரமாம் பிரயாகையில் கங்கை, யமுனை, சரஸ்வதி ஆகிய மூன்று நதிகள் சங்கமமாகும். புனித இடத்தில் அதிகாலை வேளையில் வெட வெடக்கும் குளிரில் கூட்டத்தோடு கூட்டமாக நின்று கொண்டிருந்த நான் ஒருமுறை சுற்றிப் பார்த்தேன்.

உண்மையிலேயே பிரமிக்க வைக்கும் காட்சி. கோடிக் கணக்கான பக்தர்கள் தொட்டால் மரத்துப்போகும் ஜில்லென்ற ஐஸ் தண்ணீரில் பக்தியுடன் ஸ்நானம் செய்யும் காட்சி ஒரு புறம்.

கரையில் ஆங்காங்கு அமைக்கப் பட்டிருக்கும்உயரமான கண்காணிப்பு மேடைகளிலிருந்து காவல் துறையினர் ஒலிபெருக்கிமூலம் பக்தர்களுக்கு

# பிரயாகையில் ஒரு பெருவிழா

அறிவிப்புகளை அளித்துக் கொண்டிருப்பதற்கிடையில், பக்தியுடன்

"போலோ கங்கா, மையா கி ஜய்
போலோ தீர்த்தோங் கி ஜய்"

என்ற கோஷங்களை எழுப்பிக் கூடியிருந்த பக்தர்களைபக்திப்பரவசத்தில் ஆழ்த்தும் காட்சி ஒரு புறம்.

மைல் கணக்கில் பரந்து கிடக்கும் மணற்பரப்பில் காட்சி தரும் ஆயிரக் கணக்கான தற்காலிகக் கூடாரங்களும் அவற்றிடையே கண்ணைப்பறிக்கும் விதத்தில் ஒளிதரும் வண்ண மின் விளக்குகளின் அற்புதமான காட்சி ஒரு புறம்.

திரிவேணி சங்கமத்தில் கண்ணுக்குத் தெரியும் கங்கை, யமுனை நதிகளுடன் கண்ணுக்குத் தெரியாத சரஸ்வதி நதி அந்தர்வாஹிணியாக வந்து சங்கமமாகிறது என்பது புராணக் கூற்று. கலங்கிய நீருடன் வெண்ணிறத்தில் ஓடி வரும் கங்கை, நீலநிறத்தில் பிரவஹிக்கும் யமுனையுடன் கலக்கும் காட்சி கண்ணைக் கவருகிறது.

பன்னிரண்டு வருடத்திற்கொரு முறை நிகழும் கும்பமேளா இவ்வருடம் "தீர்த்தராஜ்" எனப்படும் பிரயாகையில் நிகழ்கிறது "தீர்த்தராஜ்" என்றால் புண்ணிய ஸ்தலங்களில் தலை சிறந்தது என்பது பொருள்.

கங்கையில் நீர் மிகவும் குறைந்து காணப்படும். இந்த ஜனவரி மாதத்தில் கங்கையின் குறுக்கே பல்வேறு இடங்களில் ராணுவத்தினர் பெரும் பெரும் இரும்பு உருளைகளைப்போட்டு அவற்றின் மீது தற்காலிகப் பாலங்களைக் கட்டியுள்ளனர். அவற்றின் மீது இடைவிடாது மக்கள் வெள்ளமும் ஜீப், கார், போன்ற பல்வேறு வாகனங்களும் சென்ற வண்ணம் இருக்கின்றன.

கும்பமேளா நடைபெறும் இடத்தில் சுமார் 60 சதுர மைல் பரப்பில் ஒரு 'கும்ப நகரமே' அரசினரால் உருவாக்கப்பட்டிருக்கிறது. இரவும் பகலும் எந்நேரமும் ஒலி பெருக்கிகள் மூலம் அடங்கிய குரலில் பல்வேறு பக்திப் பாடல்கள் ஒலித்த வண்ணம் இருக்கிறது.

சன்யாசிகளில் பல வகையினர் பல்வேறு உடைகளில் காட்சி தருகிறார்கள். வெள்ளை உடை, மஞ்சள் உடை, காவி உடை, உடை ஏதும் இல்லாத அவதூத சன்யாசிகள், கங்கைக் கரை வெண்ணிற மணலையே உடல் மீது பூசிக்கொண்டு காட்சி தரும் பைராகிகள் இவ்விதம் பல வகையினர்.

பல்வேறு மொழிகள் நம் செவிகளில் விழுகின்றன. பாரதத்தின் பல மாநில மக்கள் ஹிந்து சமயத்தின் பல்வேறு பிரிவுகளைச் சார்ந்த சாது மகாத்மாக்கள் மற்றும் பக்தர்களின் குழுக்கள் ஒன்றினையும் சங்கமஸ்தானமாக கும்ப நகர் காட்சி தருகிறது. "வேற்றுமையில் ஒற்றுமை" என்ற சொற்றொடரின் இலக்கணமாக கும்பமேளா நகரம் தென்படுகிறது. பாரத நாட்டின் ஒருமைப்பாட்டின் சின்னம் அது. அதைக் கண்டு மனம் புளகாங்கிதமடைகிறது. பேசும் மொழிகள் பலவானாலும், கடை பிடிக்கும் சம்பிரதாயங்கள் பலவானாலும் அணியும் உடைகள் வேறுபட்டாலும் திரிவேணி சங்கமத்தில் புனித ஸ்நானம் செய்யும் கோடிக் கணக்கான பக்தர்களின் அடி மனதில் "நாம் அனைவரும் பாரதத் தாயின் புதல்வர்கள், மதங்களுக்கெல்லாம் ஆதி மதமான ஹிந்து மதத்தின் பிரதிநிதிகள், உலகிற்கு ஆன்மீகப் பொக்கிஷத்தை வழங்கிய பல்வேறு மகான்களின் வாரிசுகள்" என்ற எண்ணமே மேலோங்கி நிற்கிறது.

பண்பாடு ஒற்றுமையின் சின்னம், நாட்டு ஒற்றுமையின் சின்னம் கும்பமேளா என்றால் அது மிகையாகாது. கொட்டும் பனியில் திறந்த மணற் பரப்பில் அமைக்கப்பட்ட கூடாரங்களில் நாங்கள் தங்கினோம். மணலுக்கு மேல் வைக்கோலைப் பரப்பி அதன் மேல் சாக்குகள் விரிக்கப்பட்டு அவற்றின் மேல் 'ரஜாய்' என்றழைக்கப் படும் மெத்தைகளின் மீது உறங்கினோம். நம் உடல்மீது ரஜாய்களைப் போர்த்திக்கொண்டு படுத்தாலும் குளிர் நடுங்குகிறது. இருந்தாலும், சங்கமத்தில் ஜில்லென்ற கங்கா ஜலத்தில் ஸ்நானம் செய்தவுடன் பக்தி

பேராசிரியர் டி. கே. நாராயணன்,
M. Sc.. M. Ph,
ஆசிரியர், 'சமயஜோதி" மதுரை.

பரவசத்தில் உடல் புல்லரிக்கிறது. மீண்டும் ஸ்நானம் செய்ய வேண்டு மென்ற ஆவல் எழுகிறது. நேரம் அதிகமாய் விட்டால் உடல் மரத்துப் போனது போன்ற உணர்ச்சி எற்பட்டதும் கரையேறுகிறோம்.

பன்னிரெண்டு வருடங்களுக்கு ஒரு முறை நடப்பது "மஹா கும்ப மேளா" என்றும், ஆறு வருடங்க ஒரு முறை நடப்பது "அர்த்த கும்ப மேளா" என்றும் அழைக்கப்படுகிறது. ஹரித்வார், பிரயாகை, உஜ்ஜயினி ஆகிய இடங்களிலும் கும்பமேளா நடைபெறுகிறது.

மஹா கும்பமேளாவில் மூன்று முறைசங்கமத்தில் ஸ்நானம்செய்வது ஆயிரம் அச்வமேத யாகத்திற்கு நிகர் என்று புராணங்கள் கூறுகின்றன. பொதுவாக கும்பமேளாவிற்கு வருகை தருபவர்களை மூவகையினராகப் பிரிக்கலாம். சாதாரண பக்தர்கள் ஒருவகை. மகர சங்கராந்தி, தைப் பூசப் பூர்ணிமை, தை அமாவாசை, வஸந்த பஞ்சமி, மாசி பூர்ணிமை, மஹா சிவராத்திரி என்று ஆறு முக்கியநாட்கள் ஸங்கம ஸ்நானத்திற்குச் சிறந்ததாகக் கருதப்படுகின்றன. ஆக மகர சங்கராந்தி முதல் மகா சிவராத்திரி வரை உள்ள தினங்கள் கும்ப ஸ்நானத்திற்கு உரியவையாகக் கருதப்படுகின்றன.

மாதம் முழுவதும் கங்கைக் கரையில் விரதமிருந்து சடங்குகளுடன் தினமும் மும்முறை ஸ்நானம் செய்யும் பக்தர்கள் இரண்டாவது வகையினராவர். இவர்களை கல்பவாசிகள் என்பர். இவர்கள் விரத காலத்தில் ஆங்காங்குப் பல கூடாரங்களில் நிதமும் மகான்கள் மற்றும் சாதுக்களின் உபன்யாசங்களைக் கேட்பதில் நேரத்தைச் செலவிடுகின்றனர். தங்களால் இயன்ற அளவு தானமும் செய்கின்றனர். பைராகிகள், சாதுக்கள் போன்றோர் மூன்றாவது வகையினர் ஆவர். ஒவ்வொரு பிரிவினரின் கூடாரமும் 'அகாடா' என்றழைக்கப்படுகிறது. நம்பப் பருவத்தின் மிக முக்கிய நாளான பௌனி அமாவாசை நாளன்று கோடிக்கணக்கில் பக்தர்கள் சங்கம ஸ்நானத்திற்காகக் கூடுவர். அன்று முகூர்த்த வேளையில் இன்னின்ன அகாடாக்களின் மஹாத்மாக்கள் இன்னின்ன வரிசைப்படி குறிப்பிட்ட இடங்களில் ஸ்நானம் செய்ய வேண்டுமென்று அரசு ஏற்பாடு செய்திருக்கிறது. இத்தகைய சூழ் நிலையில் கூட்ட நெரிசலைத் தவிர்ப்பது தான் காவல் துறையினரின் தலையாய பணியாகும்.

பக்தர்களின் நலன்கருதி உத்திரப் பிரதேச அரசு பல விரிவான ஏற்பாடுகளை நன்முறையே செய்துள்ளது. கங்கையின் இருகரையையும் பல இடங்களில் இணைக்கும் தறகாலிகப் பாலங்கள், இரவும் பகலும் எந்நேரமும் குழாய்களில் வெந்நீர் வசதி, மலிவு விலைக்கு பக்தர்களுக்கு பால், அரிசி, பருப்பு போன்ற பல வசதிகளை அரசு செய்துள்ளது. மணற் பரப்பில் கனரக வாகனங்கள் செல்வதற்காகப்பெரும் பெரும் இரும்புத் தகடுகளாய் போட்டு அவற்றின் மீது மணல் மூடாதிருக்க நீரை தெளித்தவண்ணம் பணியாட்கள் ஈடுபட்டிருக்கின்றனர்.

பைராகி சாதுக்கள், நாகா சாதுக்கள் போன்றோர் போர்முறைப் பயிற்சிகளிலும் தேர்ச்சி மிக்கவர் என்று கருதப்படுகிறது. முன்னாட்களில் முகலாயப் படைகளை இவர்கள் எதிர்த்து சமாளிப்பதற்காகப் பல்வேறு பயிற்சி முறைகளைப்பெறவேண்டியிருந்ததாம் இத்தகைய அகாடாக்களில் ஒன்று சீக்கிய குருநானக்கினால் நிறுவப்பட்டது. அந்த அகாடாவில் பஞ்சாப்பைச் சேர்ந்த பக்தர்கள் பெரும் எண்ணிக்கையில் இன்றும் பிரயாகையில் கூடி சீரிய தான தருமங்களில் ஈடுபடுகின்றனர். "நயானு அன்னக்ஷேத்ரம்" என்ற பெயர் தாங்கிய பஞ்சாபிய அன்னக்ஷேத்திரத்தினுள்சென்று பார்த்தோம். பிரம்மாண்டமான அளவில் விதவிதமான ஸ்வீட்டுகள், பூரி, சப்பாத்தி, காரவகைகள் என்று தயார் செய்து எத்தனை பேர் வந்தாலும் இனிய முகத்துடன் பரிமாறிக் கொண்டேயிருக்கின்றனர். காலை மாலை வேளையில் பெரிய தட்டுக்களில் லட்டு உருண்டைகளைக் கையில் வைத்துக் கொண்டு தெருவில் போவோர், வருவோர்க்கெல்லாம்பிரஸாதமாகத் தரும் காட்சி அற்புதமானதாகும்.

ஹிந்து – சீக்கியர்டையே பஞ்சாபில் அரசியல் ரீதியில் ஒற்றுமை குலைந்து காணப்படும் இன்று, பிரயாகையில் நாங்கள் கண்ட அந்தக்காட்சி அன்று ஆன்மீகரீதியில் ஹிந்துக்களின் ஒரு பிரிவினராக எவ்வளவு ஒற்றுமையுடன் சீக்கியர்கள் வாழ்ந்திருக்கின்றனர் என்று எங்களை சிந்திக்க வைத்தது. உண்மையில் சைவ, வைணவம் போல சீக்கியமும் ஹிந்து மதத்தின் ஒரு பிரிவேயாகும். நமது வேத உபநிடதக் கருத்துக்களைத்தான் ஆழ்வார் நாயன்மார்களைப் போல குருநானக்கும் அழகிய முறையில் எடுத்தியம்பியிருக்கிறார். "கிரந்த ஸாஹிப்" என்ற சீக்கிய மதநூல் நமது தேவார மற்றும் திவ்வியப் பிரபந்தத்திற்கு நிகரான ஒரு புனிதநூலாகும். பிறகு ஏன் பஞ்சாபில் இத்தகைய பயங்கர கொலைகள் இன்று நிகழ்கின்றன? எல்லாம் கீழான அரசியல்வாதிகளாலும், பயங்கரவாதிகளாலும், மத வெறியர்களாலும்தான் இப்பொழுது நடைபெறும் பஞ்சாப் படுகொலைகளுக்கும் சமயத்திற்கும் சம்பந்தம் எதுவுமே இல்லையென்று பிரயாகையில் நாங்கள் பங்கு கொண்ட ஹிந்து சம்மேளனத்தில் பெரிய பஞ்சாப் அறிஞர்களும் சமயவாதிகளும் கருத்து தெரிவித்தனர். விரைவில் பஞ்சாபில் பயங்கரவாதம் முற்றிலும் முடிந்து அமைதிநிலவும் என்று அங்குப்பேசியவர்கள் நம்பிக்கை தெரிவித்தனர்.

பிரயாகையின் இன்றைய பெயர் அல்லாஹாபாத் ஆகும். முகலாயப் படையெடுப்பினால் நமது பண்பாட்டிருக்கும் சமயத்திற்கும் ஏற்பட்ட இன்னல்களும் இடுக்கண்களும் எண்ணற்றவை. நமது புராதன அழகுமிக்க

கோயில்கள் எல்லாம் முகலாயர்களால் இடித்துத் தரை மட்டமாக்கப்பட்டன. ஸோமநாத் போன்ற இடங்களில் இருந்த பல ஆலயங்கள் கோரி முகம்மது, முகம்மது கஜினி போன்ற கொடுங்கோலர்களால் பல முறை சூரையாடப்பட்டன. காசி, அயோத்யா, மதுரா போன்ற இடங்களில் இருந்த கோயில்கள் தரைமட்டமாக்கப்பட்டன அல்லது மசூதிகளாக மாற்றப்பட்டன. இன்று நாம் காணும் காசியில் உள்ள பிரசித்தமான விஸ்வநாதர் ஆலயம் உண்மையில் சிறியதாக இருக்கிறதல்லவா? அதன் அருகில் இன்று காணப்படும் பெரிய மசூதிதான் உண்மையான பழைய பெரிய விஸ்வநாதர் ஆலயமாகும். இதற்கானச் சான்றுகளை மசூதியின் சுவற்றிலேயே இன்றும் நாம் காணலாம்.

அதுபோல ஸ்ரீராமரின் ஜன்ம பூமியாகிய அயோத்தியில் இருந்த பெரிய ஆலயம் இன்று ஒரு மஸ்ஜித்தாகக் காட்சி தருகிறது.

பாபர் படையெடுப்புக்குப் பின் அந்தப் புராதன ஆலயம் இடிக்கப்பட்டது; மசூதியாக மாற்றப்பட்டது என்பதற்கு நிறையச் சான்றுகள் உள்ளன. அந்தப் புனித இடத்தை மீண்டும் பெற்று அங்கே பிரம்மாண்டமான ஸ்ரீராமர் ஆலயத்தை நிர்மாணிக்கும் புனிதப் போராட்டத்தில் விஸ்வ ஹிந்து பரிஷத் இன்று தன்னை ஈடுபடுத்திக் கொண்டுள்ளது. ஹிந்துக்களிடையே ஒற்றுமை ஓங்க ஓங்க எத்தகைய சாதனையையும் அவர்களால் செய்ய இயலும். அன்னியரின் ஆட்சியிலிருந்து அரசியல் சுதந்திரம் பெற்று 40 வருடங்களுக்கு மேலாகியும் நாம் இன்று ஆன்மீக சமய சுதந்திரம் பெறாமல் விளங்குவது உண்மையிலேயே வெட்கப்பட வேண்டிய விஷயமாகும்.

முகலாயர் படையெடுப்பின் மற்றொரு விளைவு புராதனமான பல பெயர்கள் முஸ்லிம் மயமாக்கப்பட்டன. பிரயாகை அலாஹாபாத் ஆனதும் இப்படித்தான். தவிர ஹைதராபாத் காசியாபாத் என்று 'பாத்'தில் முடியும் பல பெயர்களும் முகலாயர்களின் ஆட்சிக் காலத்தில் ஏற்பட்டவையாகும். ஹித்துமதம் சமய சமரசத்தில்நம்பிக்கைக் கொண்டிருந்தாலும் நமது பண்பாட்டிற்கு ஊறு விளையும் பொழுதெல்லாம் ஹிந்து சமயத்தைக் காப்பதுவே நமது தலையாய கடமை என்பதை நாம் மறுப்பதற்கில்லை.

பிரயாகையில் நாங்கள் கண்ட சாதுமகாத்மாக்களின் அமைப்புக்களைப்பொதுவாக இருபிரிவாகப்பிரிக்கலாம். புராதன ஹிந்து சம்பிரதாய அமைப்புக்கள்ஒருவகை ராமகிருஷ்ண மிஷன், தெய்வநெறிக்கழகம், ஹரே கிருஷ்ண இயக்கம் பிரஜாபிதா அமைப்புக்கள் மறுவகை. இஸ்கான் (International Society for Krishna Csonciousness) சபையினர் பகவான் ஸ்ரீ கிருஷ்ணரிடம் பரமபக்தி பூண்டவர்கள். ஸ்ரீ கிருஷ்ணரின்



பிரயாகையில் ஸ்ரீ ஜயேந்திர சரஸ்வதிசுவாமிகள். புகைப்படம்: நன்றி, ஃபிரண்ட் லைன்.

லீலைகள் சிலவற்றைப்பெரிய அளவில் தத்ரூபமாக வண்ண விளக்குகளுடன் அங்கு வைத்திருந்த காட்சி காண் போர் உள்ளத்தைக் கவர்ந்தது.

'பிரயாகையில் உள்ள தெய்வ நெறிக் கழகக் கிளையின் ரிஷிகேசம் சிவானந்தாச்சிரமத்தின் சார்பில் அங்கே ஒரு கூடாரத்தை அமைத்திருந்தனர். அங்கே நாங்கள் சென்று ஒரு இரவு தங்கினோம். அங்கிருந்த சுவாமி அத்யாத்மானந்தர் மற்றும் சாதுக்கள் எங்களை அன்புடன் வரவேற்றனர். இரவு வெகு நேரமாகியும் எங்களுக்காகச் சுடசுட உணவு தயாரித்துப் பரிமாறியதை எங்களால் மறக்கவே முடியாது. அதிகாலை நாலரைமணிக்குக்கொட்டும் பனியையும் பொருட்படுத்தாது, சிவானந்தரசிரம சாது சன்யாசிகள் பங்கு கொண்ட ''பிரபாத்போ'' என்ற வீதி பஜனையில் நாங்கள் கலந்து கொண்டோம். அடுத்து பிரயாகை நகர பிரபல டாக்டர்களுக்கு சுவாமி அத்யாத்மானந்தர் அளித்த யோகாசனப் பயிற்சியிலும் கலந்து கொள்ளும் பேறு எங்களுக்குக் கிட்டியது. ரிஷிகேசம் தெய்வநெறிக் கழகத்தலைவர் ஸ்ரீ சுவாமி சிதானந்தர் அவர்களும் கும்பமேளாவின்போது பிரயாகைக்கு விஜயம் செய்து பக்தர்களுக்கு தரிசனமும் அருளுரையும் தந்தது குறிப்பிடத்தக்கது.

பிரயாகையில் கங்கைக் கரையில் அனைவரது கண்களையும் கருத்தையும் கவர்வது பிரம்மாண்டமாகக் காட்சி தரும் ஸ்ரீ சங்கர விமான மண்டபமாகும். காஞ்சி ஜகத்குரு ஸ்ரீ ஜயேந்திர ஸரஸ்வதி, அவர்களது பெருமுயற்சியால் இரண்டு வருடங்களுக்குமுன் கட்டி முடிக்கப்பட்ட அந்தக் கட்டடம் மூன்றுமாடி அமைப்பும் அதன் மீது தென்னிந்திய முறையில் கட்டப்பட்ட கோபுரத்துடன் கம்பீரமாகக் காட்சி தருகிறது நாங்கள்அங்குச்சென்றசமயம் காஞ்சி ஜகத்குருஸ்ரீஜயேந்திரஸரஸ்வதிசுவாமிகளும்அங்கேஇருந்தார்கள் எங்களை அவர்அன்புடன் வரவேற்றார். விஸ்வ ஹிந்து பரிஷத் ஏற்பாடு செய்திருந்த மூன்றாவது ஹிந்து சமய சாதுக்கள் மாநாட்டிற்குத்தலைமைவகித்து அவர் ஆற்றிய சரளமான ஹிந்தி உரை அனைவரது கருத்தையும் ஒருங்கே கவர்ந்தது. பிரம்மாண்டமான மாநாட்டுப் பந்தலில் அமர்ந்திருந்த ஆயிரக்கணக்கான அன்பர்களும், மாநாட்டு மேடையில் அமர்ந்திருந்த அனைத்து துறவிகளும் ஸ்ரீ ஜயேந்திரர் சபையில் நுழைந்ததும் ஒருங்கு சேர எழுந்திருந்து அவரை அன்புடன் வரவேற்ற காட்சி எங்களது மனத்தில் இனிதே பதிந்ததொரு காட்சியாகும். உத்திரப்பிரதேச அரசு விஸ்வஹிந்து பரிஷத்திற்கு விழா நடத்த கங்கைக் கரையில் ஏதோ ஒரு மூலையில் இடம் கொடுத்த அந்த நிலையில், ஸ்ரீஜயேந்திர சரஸ்வதி ஸ்வாமிகள் அவர்கள் விஸ்வஹிந்து பரிஷத்தினர் நடத்திய சமயமாநாட்டிற்குத்தமதுமடத்திற்கு எதிரிலேயே இடம் கொடுத்து உதவியது ஹிந்து சமய வளர்ச்சியின்பால் அவருக்குள்ள ஆர்வத்தைக் காட்டுகிறது.

திரிவேணி சங்கமத்தில் புனித நாளன்று கங்கையில் மூழ்கிப் பிராணனை விடுதல் முக்தியைத்தரவல்லது என்ற நம்பிக்கையில் நதிக்கரையில் உள்ள அக்பர் கட்டிய கோட்டைக்குள் இருக்கும் பிரபலமான அக்ஷய வடத்தில் (ஆலமரம்) ஏறி கங்கையில் குதித்துப் பலர் பிராணனை விட்டிருக்கின்றனர் என்பதை ஹர்ஷவர்த்தன மன்னரின் விசேஷ விருந்தினராக கி. பி. 641-ல் பிரயாகைக்கு விஜயம் செய்த பிரபல சீன யாத்திரிகர் யுவான் சுவாங் தமது குறிப்பில் எழுதி வைத்திருக்கிறார். இதைத் தடுப்பதற்காகஅக்பர் கோட்டையின் மதில் சுவரை உயரமாகக் கட்டினார் என்று கூறப்படுகிறது. இன்று அந்த அக்ஷய வடத்தைப் பொதுமக்கள் பார்க்க அனுமதி கிடையாது

நம்நாடு சுதந்திரமடைந்த பின்னர் முதல் கும்பமேளா 1954-ம் ஆண்டு நடந்தது. நேருஜி ராஜேந்திரபிரஸாத் போன்ற பெருமக்கள் அதில் பங்கு கொண்டனர். 1954 பிப்ரவரி 1-ம் தேதி அன்று சங்கமத்தில் கூடிய பெரும் நெரிசலில் பலர் மாண்டனர். அதன் பின் கூட்டத்தினரைக் கட்டுபடுத்தப் பல ஏற்பாடுகள் மேற்கொள்ளப்பட்டன. அதனால் அத்தகைய துக்ககரமான நிகழ்ச்சிகள் தவிர்க்கப்பட்டன. சில ஆண்டுகளுக்கு முன்னர் ஹரித்வாரில் நடந்த கும்பமேளாவின் போது கூட்டத்தினரிடையே திடீரென்று வந்த பிரமுகர் ஒருவருக்கு விசேஷ ஏற்பாடு செய்ததன் காரணமாக எழுந்த நெரிசலில் சிலர் மரணமடைய நேரிட்டது. அதன் விளைவாக தற்போதைய பிரதமர் ஸ்ரீ ராஜீவ் காந்தி விசேஷ நாட்களில் மந்திரிகள் மற்றும் பிரமுகர்கள் சங்கமத்திற்குச் செல்வதைத் தவிர்க்கவும் என்ற ஒரு வேண்டுகோளை விடுத்தார். இவ்வாண்டு அரசு செய்துள்ள சீரிய முன்னேற்பாடுகள் காரணமாக எத்தகைய அசாம்பாவிதமும் நிகழவில்லை என்பது குறிப்பிடத்தக்கது.

பல ஆண்டுகளுக்குப் பிறகு கும்பமேளா நிகழும் சமயம் திங்கட்கிழமையன்று ஏற்பட்ட 'மௌனி அமாவாசை' மிகச் சிறப்பு வாய்ந்தது என்று கூறப்படுகிறது. இதில் சுமார் ஒன்றரை கோடி பக்தர்கள் திரிவேணி சங்கமத்தில் புனித நீராடினர் என்று கூறப்படுகிறது. பாரத நாட்டு ஒற்றுமைக்கும் ஹிந்து சமய ஒற்றுமைக்கும் ஒரு சிறந்த எடுத்துக் காட்டாக கும்பமேளா போன்ற இத்தகைய விழாக்கள் விளங்குகின்றன என்பதில் எள்ளளவும் ஐயமில்லை.



# ஸ்ரீ ராமநாம ப்ரபாவம் 

திரு. எஸ். கிருஷ்ணஸ்வாமி,
திருவள்ளூர்.

ஸ்ரீராமநாமம் வேதபுராணங்களின் திரண்ட ஸாரம்; ஸகல மங்களங்களுடைய இருப்பிடம். பாபங்களனைத்தையும் போக்கக்கூடிய சக்தி வாய்ந்தது. திரிபுராரியான பரமசிவனும் பவானியும் இந்த நாதத்தை எப்போதும் ஜபம் செய்து கொண்டிருக்கிறார்கள். ராமனின் சரிதம் கலியின் கொடுமையை அழித்து மங்களத்தை அளிக்கிறது. ராம நாமத்தில் அக்னி, சூரியன், சந்திரன் ஆகியவர்களின் பீஜாக்ஷரங்களாகிய 'ரீ' 'அ' 'ம' என்ற மூன்று அக்ஷரங்கள் அடங்கியிருக்கின்றன. இது பிரம்மா விஷ்ணு, சிவன் ஆகிய மூவரின் ஸ்வரூபமாகவும் வேதத்தின் மூச்சுக் காற்றாகவும் உள்ளது. ஸ்ரீராம் என்கிற மஹாமந்திரத்தை மஹேசர் நாத ரூபமாக ஜபித்துக் கொண்டு ஆனந்தத்தை சதா அனுபவித்துக் கொண்டிருக்கிறார். அதன் வீர்யத்தால் காசியில் மரிக்கும் மக்களுக்கு முக்தியை அளிக்கிறார். ராமநாமப் ப்ரபாவமே சம்புவுக்குக் காலகூட விஷத்தையும் அமிருதத்திற்கு ஒப்பாகச் செய்தது. ராம நாமத்தை 'மரா' என்று உபதேசிக்கப்பட்டு அவ்வாறே ஜபித்து வந்ததாலேயே வால்மீகி, வேடனாக இருந்த நிலைமாறி மஹாருஷி ஆகி, ஆதிகாவியத்தை இயற்றும் வல்லமையை அடைந்தார். இந்த நாமத்தை ஒரு தடவை மட்டில் ஜபித்தால் அது விஷ்ணுவின் ஆயிர நாமங்களையும் ஜபித்ததற்கு இணையாகும் என்று பார்வதிக்குப் பரமசிவன் உபதேசித்தார். அந்த உபதேசத்தை விசுவாசத்துடன் கேட்டுப் பார்வதி ஜபித்ததின் பலனாக பரமசிவனுடன் கூட உட்கார்ந்து போஜனம் செய்தாள். (இது விஷயமாகக் கூறப்படும கர்ணபரம்பரையான வரலாறு: பார்வதியும், பரமசிவனும் தினந்தோறும் தனித்தனிப் பூஜைக்குப் பிறகு ஒன்றாக உட்கார்ந்து போஜனம் செய்வது வழக்கம். ஒரு தினம் பரமசிவனுடைய பூஜை முடிந்து அவர் போஜனத்திற்குச் சித்தமாக இருந்தார். அப்போது பார்வதியின் பூஜையில் விஷ்ணு ஸஹஸ்ரநாமஜபம் பாக்கியாக இருந்தது. கணவனைக் காத்திருக்கச் செய்யவும் விஷ்ணு ஸகஸ்ரநாமத்தை முடிக்காமல் போஜனத்திற்கு உட்கார முடியாமலும் பார்வதி சங்கடப்பட்டுக்கொண்டிருந்தாள். அப்போது பரமசிவன் பார்வதியைப் பார்த்து "ராம' என்ற நாமத்தை ஒருதரம் உச்சரித்தாலே அது விஷ்ணவின் ஸஹஸ்ரநாமங்களையும் உச்சரித்ததற்கு சமம்' என்று கூறினார். பக்தி சிரத்தையுடன் பரமசிவனின் உபதேசப்படி பார்வதி 'ராம' நாமத்தை ஒரே தடவை ஜபித்துவிட்டு அவளுடைய பூஜையை முடித்துக் கொள்ள, இருவரும் சேர்ந்து உடனடியாக போஜனம் செய்தனர்.) கணேசர் ராம நாமத்தை நாரதர் உபதேசப்படி வலம் வந்து முதற்கடவுளானார். (இது சம்பந்தமான வரலாறு: தேவர்கள் எல்லோரும் கூடித் தங்களுக்குள் ஒருவரை முதற்கடவுளாக ஏற்படுத்திக் கொள்ள விரும்பினார்கள். அதற்காக பிரம்மாவிடம் சென்று ஆலோசித்தனர். அவர்கள் எல்லோரும் பூமியை ஒரு முறை வலம் வரவேண்டியதென்றும் அவ்வாறு செய்பவர்களுக்குள் யார் முதலாவதாக வந்து பிரம்மாவை அடைகிறாரோ அவரே முதற்கடவுளாவார் என்றும் பிரம்மா கூறினான். அந்த ஆலோசனையை எல்லா தேவர்களும் ஏற்றுக் கொண்டு அவரவர்கள் தம் தம் ஊர்தியில் ஏறி பூமியை வலம் வரச் சென்றனர். விநாயகரும் அந்தப் போட்டியில் கலந்து கொண்டு தன்னுடைய ஊர்தியில் சென்று கொண்டிருந்தார். அப்போது அவருக்கு எதிரில் நாரதர் வந்து விநாயகர் மூலம் விவரங்களை அறிந்தார். மிகவும் பின் தங்கி



இருந்த விநாயகரைப் பார்த்து, இவ்வாறு சென்றால் உம்மால் வெற்றி காண முடியாது. ஆகையால் பூமியில் ஒரு வட்டமான கோட்டை வரைந்து அதற்குள் 'ராம' நாமத்தை எழுதி ஸ்ரீராமனைத் தியானித்துக் கொண்டு ஒரு முறை வலம் வந்து உடனடியாகப்பிரம்மாவிடம் சென்று விடும்' என்று கூறிவிட்டுச் சென்றார். விநாயகரும் அவ்வாறே செய்து முடித்து வெகு சீக்கிரமாக பிரம்மாவிடம் போய்ச் சேர்ந்தார். பிரம்மா விநாயகரைப் பார்த்து அதிசயித்து, எவ்வாறு அவ்வளவு சீக்கிரமாக வர முடிந்தது என்று கேட்டார். நடந்த விவரங்களை விநாயகர் கூறினார். விநாயகர் செய்தது பூமியை வலம் வந்ததற்குச் சமம் என்று பிரம்மா ஆமோதித்தார். சகல தேவர்களும் பிரம்மாவின் தீர்ப்பை ஏற்றுக்கொண்டனர். இந்த சம்பவத்தினால்தான் விநாயகர் அன்று முதல் இன்று வரை கடவுளர்களுள் முதற்கடவுளாக வணங்கி வழிபடப்படுகிறார்.

உலகிலுள்ள ஜீவராசிகள் யாவற்றையும் நெல் முதலிய தான்யங்களுக்கு ஒப்பிடலாம். அவற்றின் வளர்ச்சிக்கு ராம பக்தியாகிய மழை காரணமாக உள்ளது, இந்த மழைக்குச் சாதனமான வருஷருது ஆவணி, புரட்டாசி ஆகிய இரண்டு மாதங்களைக் கொண்டிருப்பதைப்போல ராம பக்தியாகிய வர்ஷம் 'ரா' 'மா' என்று இரண்டு அக்ஷரங்களைக் கொண்டுள்ளது. அந்த இரண்டு அக்ஷரங்களும் ராமன் சீதையாகிய இருவர்களின் சரிதங்களை வர்ணிக்கும் கதைகளுக்கு இரு நேத்திரங்களாக அமைந்துள்ளன. இந்த இரண்டு அக்ஷரங்கள் மிகவும் அழகாகவும், நினைப்பதற்கும் ஜபிப்பதற்கும் மனத்தில் தரித்துக் கொள்வதற்கும் மிகவும்சுலபமாகவும் இருக்கின்றன. ஜீவகோடிகள் எல்லாவற்றிற்கும் குலதனமாக உள்ளஇந்த இரண்டு எழுத்துக்கள், ராம லக்ஷ்மணர்களைப்போலும் நர நாராயணர்களைப்போலும் எப்போதும் இணைபிரியாமல் இருக்கின்றன. இவற்றின் சேர்க்கை ஜீவ ஸ்வரூபமும் பிரம்மஸ்வரூபமும் கலந்த ஒரே ஆனந்த ஸ்வரூபமாகத் தோன்றுவதைப் போல் உள்ளது. இவை பக்தி பரவசமான ஒரு ஸ்திரியின் காதுகளில் அணிந்து கொண்டு சுடர்விட்டுப் பிரகாசிக்கும் இரண்டு குண்டலங்களைப்போல் உள்ளது. இவை ஜகத்தின் இருளைப் போக்குவதில் சூரிய சந்திரர்களை ஒத்திருக்கின்றன. அமிருதத்தைப்போல் ருசிக்கும் இந்த இரு அக்ஷரங்களும், கூர்மாவதாரத்தில் தேவர்களை ரக்ஷித்த மஹாவிஷ்ணுவையும் (ஆமையையும்) ஆதிசேஷனையும் போலுள்ளன யசோதையின் ராம கிருஷ்ணர்களைப்போல ஆனந்தத்தை அளிக்கின்றன. பக்தர்களின் ஹிருதயமாகிய தாமரை மலரைச் சுற்றி ரீங்காரம்செய்யும்வண்டுகளாக இவை இருக்கின்றன. இரண்டு எழுத்துக்களும் ஒரு அரசனின் கிரீடத்தைப் போலும், குடையைப்போலும் பிரகாசத்தையும் பலனையும் அளிக்கின்றன. எழுத்துக்கள் எல்லாவற்றிலும் உயர்ந்தது. (ராமனின் நாமம் அவருடைய திருவுருவம் ஆகிய இரண்டுக்குமுள்ள தாரதம்யத்தை ஆராய்வது அபசார ஹேதுவாகக் கருதப்படுமாயினும் அவ்விதமான சர்ச்சை ரஸமுள்ளதானது என்பது மட்டிலன்றிப்பயனுள்ளதாகவும்இருக்கும் என்பதை மறுக்க முடியாது.)

பனிக்கட்டியும், ஜலமும் ஒரே வஸ்துவின் இரு நிலைகளாக உள்ளன. அவற்றின் தன்மையும் வேறுபாடானவை. ஒன்றாகவும், தனியாகவும் உள்ள அவை இரண்டினுள் எது உயர்ந்தது என்பதைப்போன்று இந்த ஆராய்ச்சி இருப்பினும் ராமனைவிட ராம நாமம் உயர்ந்தது என்று கூறுவதற்குப் பல சான்றுகள் உள்ளன. ஒரு பொருளை அறிந்து கொள்வதற்கு அதனுடைய நாமம் அவசியமாக

உள்ளது. ஒரு பொருளின் பெயரைக் கூருமல் அதன் குணுதிசயங்கள் பல வற்றைக் கூறிஞல்மட்டில் அதை நிர்ணயமாகக் கூற இயலாது. உதாரணமாக கருமை நிறம், கொம்பு, வால் ஆகிய ஒரு ஐந்து பால் கொடுக்கிறது என்ருல் இந்த விவரங்கள் கருமை நிறமுள்ள ஆட்டையும், பசுவையும், எருமையையும் குறிக்கும். ஆனுல் பெயரைச் சொன்னுல் ஆட்டையும், பசுவையும், எருமையையும் அவற்றின் தன்மையையும் ஒரு சேர அறிந்து கொள்ள முடிகிறது. கடவுளர்களின் பொதுவான சின்னம், குணங்களை மட்டும் கூறிஞல் எவரையும் நிர்ணயிக்க முடியாது. ஆனுல் விநாயகர், முருகன், ராமன், கிருஷ்ணன் என்ற நாமங்களால் அவர்களை மனத்தில் நிறுத்தி உணர முடிகிறது. மேலும் தெய்வங்களை அவரவர்களின் பெயரைக் கொண்டு துதித்தால் அல்லவா அவர்கள் பிரத்யக்ஷமாக சேவை அளிக்கிருர்கள். மஹான்களாக இருப்பவர்கள் வெறும் மந்திரத்தை மாத்திரம் ஸ்மரணம் செய்தாலும் அவர்களுடைய விசேஷ மனப்ரேமையால் பகவத் ஸ்வரூப ரூபங்கள் அவர்கள் மனத்தில் பிரகாசிக்கின்றன. ஆகவே ரூபம் நாமத்திற்குக் கட்டுப்பட்டதாக உள்ளதென்று விளங்குகிறது. சகுண உபாஸகர்களுக்கும் நிர்குண உபாஸகர்களுக்கும் நடுவில் ராம நாமம் ஒரு அழகான தீபம் போல் உள்ளது.

சர்வாந்தர்யாமியான ராமன் ஒவ்வொரு ஜீவனுடைய ஹ்ருதயத்திலும் எப்போதும் வஸித்துக் கொண்டிருக்கிருர். ஆயினும் சம்ஸார ஸாகரத்தில் தத்தளிக்கும் ஜீவன்கள் துக்கத்தையும் கஷ்டத்தையும் அனுபவித்த வண்ணமே இருக்கின்றன. ஆனுல் அவனுடைய நாம உச்சாரணம் அவர்களுக்குச் சுகத்தையும் ஆனந்தத்தையும் அளித்து அவனுடைய ஸாக்ஷாத்காரமான தர்சனத்திற்கும் ஏதுவாகிறது. ஸ்ரீராமன் பூவுலகில் மனிதர்களாக அவதரித்துப் பல இன்னல்களை அனுபவித்து துஷ்ட நிக்ரஹ சிஷ்ட பரிபாலனத்தைச் செய்தான். ஆனுல் அவருடைய நாமஸ்மரணை எவ்வித இன்னல் இடையூறுகளுக்கும் அவசியமின்றி எளிதில் பலனை அளிக்கக் கூடியதாக உள்ளது. ஸகுணமாகவும் நிர்குணமாகவும் உள்ள ப்ரமத்தை ராமன் அறிவதற்கு அவனுடைய நாமஸ்மரணம் அவசியமாகவும் போதுமானதாகவும் உள்ளதால், ஸகுண நிர்க்குணராமனைக்காட்டிலும் அவனுடைய நாமம் மேலானதென்று கருத ஹேதுவாகிறது.

ஸ்ரீ ராமனுடைய திருவடிகள் அகல்யை ஒருத்தியினுடைய தாபத்தை மட்டில் போக்கி சுய ரூபத்தை அடையவும், பாபங்கள் நீங்கி மேன்மையை அடையவும் காரணமாக இருந்தன. ஆனுல் அவனுடைய நாமம் உலகிலுள்ள துஷ்டர்களாகவும் கயவர்களாகவும் கொடியவர்களாகவும் வாழும் பலரை நல்வழிப்படுத்துகின்றது. ஸ்ரீ ராமன் விஸ்வாமித்ரருடன் சென்றபோது தாடகை, அவளுடைய குமாரர்கள், அவர்களைச் சேர்ந்த ராக்ஷஸர்கள் ஆகியவர்களை மாத்திரம் அழித்தார். ஆனுல் அவருடைய நாமோச்சாரணம் கோடிக்கணக்கான பக்தர்களின் தோஷங்கள் யாவற்றையும் போக்கும் ஸாதனமாக இருக்கிறது. ராமன் சிவ தனுசைமட்டில் உடைத்தார். அவருடைய நாமம் சம்ஸாரத்தில் ஏற்படும் சகல பயங்களையும் நாசம் செய்யக் கூடியதாக உள்ளது. ஒரு ரத்னத்தைப் பரீக்ஷை செய்யும் சமயத்தில் அதன் விலை மதிப்பும் அறிய முடிகிறது. அதைப்போல ராம நாமத்தை பக்தியுடன் ஜபிக்கப்படும் போது அவருடைய திவ்ய ரூபமும் காட்சி அளிக்கிறது. ஆகவே ராம நாமமும் ஒரு விலைமதிப்பற்ற ரத்னத்தைப் போல உள்ளது. ராமன் கொடிய தண்டகையில் பிரவேசித்து ராக்ஷஸர்களை அழித்து, அதை முனிவர்கள் சுகமே வாசம் செய்ய வசதியான உத்யானவனமாக்கினுர். கலியுகத்தில் நாம ஸங்கீர்த்தனமே பகவானை அடையும் சாதனமாக உள்ளது. ஆகவே ராம நாமம் அசுரர்களைப் போன்ற பாபக் கூட்டங்கள் யாவற்றையும் இந்த யுகத்தில் நீக்க உதவுகிறது.

ராமநாமஸ்மரணையின் பிரபாவத்திஞல்தான் சம்புஎனப்படும் பரமசிவன் பரம அமங்களமான வஸ்துக்களின் சேர்க்கையுடனிருந்தபோதிலும் (பஸ்பம், மண்டை ஓடு முதலியவை) அவிநாசியாக இருக்கிருர். நாரதர் ராம நாமத்தின் ப்ரபாவத்திஞலேதான் ஹரிக்கும் ஹரனுக்கும் பிரியராக இருக்கிருர். அவருடைய ராம நாம உபதேசம் பிரஹ்லாதனின் ஹரி பக்திக்கும், துருவனின் ஸ்திரமான பதவிக்கும் சாதனமாக இருந்தது. ராம நாமத்தை உச்சரித்தாலேயே ஹநுமான் எளிதில் சமுத்ரத்தைத் தாண்டும் வல்லமையைப் பெற்ருர்.

இவ்விதமான பெருமைகளை உடை ராம நாமத்தின் ரூபமான ஸ்ரீ ராமச்சந்திரனின் சரித்திரத்தை பரமசிவன் அகஸ்திய முனிவரிடம் விஸ்தாரமாகக் கேட்டறிந்து தன்னுடைய ஹ்ருதயமாகிய ஏரியில் (மானஸ ஸரோவரில்) தேக்கிக்கொண்டார். பார்வதி தேவி பக்தி சிரத்தையுடன் பரமசிவனை வணங்கி ஸ்ரீ ராமனுடைய சரித்திரத்தைப் பூர்ணமாகச் சொல்லும்படி பிரார்த்தித்தாள். பிரம்மாவால் நிர்மாணம் செய்யப்பட்ட மானஸஸரோவரிலிருந்து ஸரயு நதி உற்பத்தியானதைப் போலப் பரமசிவனின் மானஸ ஸரோவரிலிருந்து ஸ்ரீராமனுடைய சரித்ரம் பிரவாஹமாக வெளிவந்தது.

(துளசிதாஸரின் ராம சரிதமானஸிலிருந்து தொகுக்கப்பட்டது.)



# அயோத்தியா பட்டினம்

அயோத்தி மாநகர் முக்திதரும் தலங்கள் ஏழினுள் ஒன்று. திரேதா யுகத்தில் மனுவே இதை ஸ்தாபித்தார். எவராலும் வெற்றி கொள்ள முடியாத நகரம் என்பதையே அயோத்தியா என்ற சொல் குறிப்பிடுகிறது. இராமகாதையுடன் உள்ள தொடர்பால் அழியாப்புகழை இவ்வூர் பெற்றுள்ளது. இராமரின் திருப்பாதம் பட்டதால் புண்ணிய பூமியான அந்நகரின் பெருமைகளை வால்மீகியும், கம்பரும் வெகு சிறப்பாக வருணித்துள்ளனர்.

திரு. எம். ராஜகோபாலன்,
சென்னை-9.



இராஜகோபுரம்.

**வால்மீகி காட்டும் அயோத்தி :**

மனிதர்களுக்கு அதிபதியான வைவஸ்வதமனுவால் நிர்மாணிக்கப்பட்ட அயோத்தி மாநகரம் பன்னிரெண்டு யோஜனை நீளமும், மூன்று யோஜனை அகலமும் உடையது. நீர்வளமும், நிலவளமும் நிறைந்த இவ்வூர், செழுமைக்கு ஒரு எடுத்துக்காட்டாக விளங்கியது. அழகிய உப்பரிகைகளையுடைய உயர்ந்த மாளிகைகள் விமானங்களைப் போலத் தோன்றின. வலிமையான கோட்டையும் நவீன ஆயுதங்களைப் பெற்ற மதில்களும், நீண்ட அகழியும் நகரின் பாதுகாவலுக்கு உத்திரவாதம் அளித்தன.

இசை வல்லுனர்கள், நடனமாதர், வணிகர், சிற்றரசர், வீரர்கள் போன்றோர் நடமாடுவதால் பரபரப்புடன் அந்நகரம் விளங்கியது. வேத, சாஸ்திரங்களில் தேர்ச்சி பெற்ற அந்தணர்கள் மக்களை நல்வழிப்படுத்தினர். ஆயுதப் பயிற்சியில் கைதேர்ந்த க்ஷத்திரியர்கள் நேர்மையுடன் திகழ்ந்தனர். இவ்வாறு அழகு பொருந்திய நிகரற்ற காந்தியுடன் அயோத்தி என்ற உத்தம நகரம் பூமியில் பிரசித்தி பெற்றிருந்தது.

**கம்பர் காட்டும் அயோத்தி :**

கம்பரின் கைவண்ணத்தில் அயோத்திமாநகர் சோழவளநாட்டில் செழுமைமிக்க நகர் போலவே காட்சியளிக்கிறது. பல கலை வல்லுநர்களான புலவர்களால் பாடப்பட்ட பெருமை உடைய அயோத்தி நகரின் சிறப்பைக் கேள்வியுற்று வானவரும் இங்கு வசிக்கவேண்டும் என்று விரும்பினார்களாம்.

"செவ்விய மதுரம் சேர்ந்தநற்
பொருளிற் சீரிய கூரிய தீஞ்சொல்
வவ்விய கவிஞரனைவரும் வடநூன்
முனிவரும் புகழ்ந்தது வரம்பி
லெவ்வுலகத்தோ ரியாவருந்
தவஞ்செய் தேறுவாருதரிக்கின்ற
அவ்வுலகத்தோ ரிழிவதற் கருத்தி
புரிகின்ற தயோத்தி மாநகரம்"

திருமகளின் கண்கள், அவரது திருமுகம், அவர் கழுத்திலுள்ள திருமாங்கல்யம், அவர் வசிக்கும் தாமரைமலர், திருமால் மார்பில் அணிந்துள்ள அணிகலப் பேழை, உலகையே காக்கும் திருமாலின் திருவயிறு, அவர் வாழும் ஸ்ரீவைகுண்டம் இவற்றுள் எதை அயோத்தி நகருக்கு ஒப்பாகக் கூறலாம் என்பது தெரியவில்லை. மும்மூர்த்திகளும் இதைவிடச் சிறந்த நக



சீதை, இராமர், லக்ஷ்மணர், அனுமன் - உற்சவ விக்கிரகங்கள்.

ரத்தைக் கண்டிலர். அத்தகைய ஒரு நகரைக் காணவேண்டி உலகெங்கும் சஞ்சரித்த சூரியனும், சந்திரனும் இதுவரை இமைகளை மூடாமல் தேடிக் கொண்டுள்ளனர். அமராவதி, அளகாபுரி ஆகிய நகரங்களைவிட இந்நகர் சிறப்பாக அமைந்திருந்ததால் இதனைக்கண்ட தேவதச்சனும் நாணுவன். வலிய அரண் இவ்வூருக்குப் பாதுகாவலளித்தது. இயற்கை வனப்பும், செழுமையும் உடைய இவ்வூரில் அறமும், செல்வமும், இறை வழிபாடும் தழைத்தன. இராமகாதையுடன் பின்னிப் பிணைந்துள்ள இம்மாநகரின் பெயரைத் தாங்கியவாறு தமிழகத்தில், சேலம் மாவட்டத்தில் ஒரு சிற்றூர் உள்ளது. அயோத்தியா பட்டினம் எனப்படும் இவ்வூர் சேலத்திலிருந்து சுமார் 10 கி. மீ. தொலைவில் அரூர் செல்லும் நெடுஞ்சாலையில் அமைந்துள்ளது. இவ்வூரும் இராமரின் வாழ்வுடன் தொடர்பு கொண்டுள்ளது. சூர்ப்பணகையின் துர்ப்போதனையால் மோகம் கொண்ட இராவணன் சீதையைச் சிறையெடுத்தான். நெஞ்சம் கனலாக, கண்ணீர்க்குளமாக இராமர், இலக்குவனுடன் சீதாப்பிராட்டியைத் தேடித் தென்திசை நோக்கிச் சென்றார். அவ்வாறு தேடிச் சென்றபோது இராமர் அயோத்தியா பட்டினத்தில் தங்கியதாக நம்பப்படுகிறது. இதற்கு ஏற்ப இவ்வூரில் கோதண்டராமர் ஆலயம் அமைந்துள்ளது.

ஆலயத்தின் முகப்பில் அமைந்துள்ள ஐந்து நிலை கோபுரம் பொலிவான தோற்றத்தை அளிக்கிறது. சுமார் நூற்றைம்பது அடி உயரமுள்ள இந்தக் கோபுரம் கிழக்கு நோக்கியவாறு அமைந்துள்ளது. இக்கோயிலில் ஒரு பிரகாரமும், ஒரு மகா மண்டபமும், ஓர் அர்த்த மண்டபமும், ஒரு கருவறையும் உள்ளன. இக்கோயில் சுமார் $1\frac{1}{4}$ ஏக்கர் நிலப்பரப்பில் அடங்கியுள்ளது.

கருவறையில நின்ற கோலத்தில் சேவை சாதிக்கும் கோதண்டராமர் அழகிய உருவம் உடையவர். அவரது உயரம் சுமார் மூன்றரை அடி இருக்கும். மூலவரின் அருகே சீதாப்பிராட்டி, லக்ஷ்மணர், பரதன், சத்ருக்னன், ஆஞ்சநேயர், விபீஷணன், சுக்ரீவன், இராமானுஜர் ஆகியோர் இடம் பெற்றுள்ளனர். இவ்வுருவங்கள் அனைத்தும் கம்பீரமான தோற்றத்தை அளிக்கின்றன. உற்சவர்களாக இராமச்சந்திரர், சீதாப்பிராட்டியார் லக்ஷ்மணர், ஆஞ்சநேயர், சக்கரத்தாழ்வார், விஷ்வக்சேனர் ஆகியோரும் அருகிலேயே காட்சி கொடுக்கின்றனர். இவ்வுலோகத் திருமேனிகளில் கலையழகு மிளிர்கிறது.

இக்கோயிலிலுள்ள மகாமண்டபம் ஒரு சிறிய கலைக்கூடமாகவே அமைந்துள்ளது. இங்குள்ள தூண்களில் குதிரைகளின் உருவங்கள் அமைக்கப்பட்டுள்ளன. முன்னங்கால்களை உயரத்தூக்கியவாறு பாயும் நிலையில் அவை உருவாக்கப்பட்டுள்ளன. அவற்றின் மீது ஆயுதமேந்திய வீரர்கள் அமர்ந்திருக்கின்றனர். கலையார்வம் மிக்கவர்களின் கண்களுக்கு இவை நல்லவிருந்தாகும். இதுபோன்ற சிற்பங்கள் நாயக்க மன்னர்களின் காலத்திலும், விசயநகர வேந்தர்கள் காலத்திலும் ஏற்பட்டன. ஸ்ரீரங்கம், மதுரை போன்ற தலங்களில் அமைந்துள்ள இத்தகைய சிற்பங்கள் மிகவும் பிரசித்தி பெற்றன. அயோத்தியா பட்டினத்திலும் இச்சிற்பங்கள் பதினாறு அல்லது பதினேழாவது நூற்றாண்டுகளில் ஏற்பட்டிருக்கலாம். இம்மண்டபத்தின்



கோதண்டராமர் தூணிலுள்ள சிற்பம்.

வடகிழக்கு மூலையில் நான்கு இசைத் தூண்கள் உள்ளனவாம்.

மகாமண்டபத்தில் இடம் பெற்றுள்ள நான்கு சிற்பங்கள் சர்ச்சைக் குரியனவாக உள்ளன. இக்கோயிலைக் கட்டிய பாளையக்காரர்களையும், அவரது குடும்பத்தினரையும் அவை குறிப்பதாக ஒரு கருத்து நிலவுகிறது. சேலத்தைச் சுற்றியுள்ள பகுதிகளை கெட்டி முதலியார்கள் எனும் சிற்றரசர் குடும்பத்தினர் ஆண்டு வந்தனர். தாரமங்கலம் கைலாசநாதர் கோயிலுள்ள அற்புதச் சிற்பங்கள் அக்காலத்தில் தோன்றின. அதுபோலவே இக்கோயிலையும் பாளையக்காரர்கள் எவராவது கட்டியிருக்கலாம்.

இக்கோயிலைத் திருமலை நாயக்கர் கட்டியதாகவும், அவரது குடும்பத்தினரின் உருவங்களையே இச்சிற்பங்கள் குறிப்பிடுவதாகவும்மற்றொரு கருத்து உள்ளது. ஆலய நுழைவாயிலில் கோயிலைக் கட்டியவர்களின் பெயர் பொறிக்கப்பட்டிருந்ததாகவும் அவை சிதைந்து விட்டதாகவும் கூறுகின்றனர். கோயிலின் வெளிப்பிரகாரத்தில் ஆழ்வார்களுக்கான தனி சந்நிதி உள்ளது. இங்குப் பன்னிரு ஆழ்வார்களையும் தரிசிக்கலாம்.

இவ்வாலயத்தில் நாள்தோறும் மூன்று காலபூஜை நடைபெறுகிறது. கோயில் காலை ஆறு முதல் மதியம் பன்னிரெண்டு வரையிலும், மாலை நான்கு முதல் இரவு எட்டு மணி வரையிலும் தரிசனத்திற்காகத் திறந்திருக்கும். சித்திரை மாதம் நடைபெறும். திருவிழா இங்குச்சிறப்பாகக் கொண்டாடப்படும். இராமநவமி, நவராத்திரி போன்ற பண்டிகைகளும் இக்கோயிலில் கொண்டாடப்படுகின்றன. தைமாதத்தில் காலைவிசேடவழிபாடு உண்டு. சுமார் இருபது அடி உயரமுள்ள மரத்தேரும், ஒரு பல்லக்கும் ஆஞ்சநேயர், குதிரை, யானை போன்ற வாகனங்களும் இவ்வாலயத்தில் உள்ளன. இவ்வாலயத்திற்குச் சொந்தமாகச்சிலகுடியிருப்புகளும்70 ஏக்கர் விளைச்சல் நிலமும் இருப்பதாகப் பழைய பதிவேடுகள் கூறுகின்றன. தேவதாசி குடும்பத்தினர் அளித்த சில அறக்கட்டளைகளும் வழக்கிலுள்ளன. உள்ளன்போடு வழிபடுவோரின் துயர் தீர்க்கும் கோதண்டராமனை அனைவரும் வணங்கிப் பேறு பலபெறுவோம்.



குதிரையின் தூண் சிற்பம்'



ஸ்ரீ மஹாநந்தீஸ்வரர் கோயில் - மஹாநந்தி,
எம். ராஜலக்ஷ்மி - திருப்பதி.



# சிறையில் பிறந்த வைணவ அந்தாதி

மகரநெடுங்குழைக்காதர் பாமாலை அந்தாதி என்னும் வைணவ இலக்கியம், பாண்டியநாட்டு திருப்பதிகளில் ஒன்ருனத் தென் திருப்பேரையில் வாழ்ந்த கவி ஸ்ரீ நாராயண தீட்சிதர் என்பவரால் இயற்றப்பட்டதாகும். விஜயநகர ஆட்சியின்கீழ் தமிழகத்தை ஆண்டுவந்த சொக்க நாயக்கர் காலத்தில், திருநெல்வேலிச் சீமையின் பிரதிநிதியாக விளங்கியவர் வடமலையப்பப்பிள்ளை என்பவராவர். இவர் காலத்தில் வாழ்ந்தவர்தான் கவி ஸ்ரீநாராயண தீட்சிதர். தமிழில் மிக்க புலமை உடைய தீட்சிதர் தெய்வபக்தியுடன் நாட்டுப்பற்று உடையவராகவும் விளங்கினுர்.

தென் திருப்பேரையில் தீட்சிதருக்குச் சொந்தமாக நிலங்கள் இருந்தன. இதற்கான தீர்வையை ஆண்டு தோறும் தவருமல் செலுத்தி வந்திருக்கிருர். ஓராண்டு வானம் பொய்த்து மழை இன்றி தமிழ் நாட்டில் வறட்சி தாண்டவமாடிய நிலையில் தீட்சிதரும் அவரது சுற்றத்தாரும் நிலத்தீர்வைக் கட்ட இயலாமல் போயிற்று.

அங்கு வரித்தண்டலராகப் பணியாற்றியவர் அதிகாரமிடுக்குக் கொண்டவர். அப்பகுதியில் வாழும் ஏழை மக்களைப் பல்வகையானும் துன்புறுத்தி வந்தார். நிலத்தீர்வை கட்டாத தீட்சிதரையும் அவர் சுற்றத்தாரையும் துன்புறுத்தத் தொடங்கினுர். அவரிடம் வறட்சி நிலைகளை எடுத்துக்கூறிய தீட்சிதர், அவ்வாண்டு வரி நீக்கம் செய்ய வேண்டுமென்று மக்கள் சார்பில் வேண்டுகோள் விடுத்தார். அரக்க மனங்கொண்ட வரித்தண்டலர், தக்க ஏற்பாடு செய்வதாகப் பொய்யான வாக்குறுதி அளித்து, அனைவரையும் திருநெல்வேலிக்கு வந்து காணுமாறு கூறிச் சென்ருன். அவர் பேச்சை நம்பி திருநெல்வேலிக்குச் சென்ற தீட்சிதரையும்மற்றவர்களையும் வஞ்சித்துச் சிறையில் அடைத்தான் வரித்தண்டலர்.

சிறையில், தம்மைச்சார்ந்தவர்கள் பட்ட துன்பங்களைக் கண்டு பெரிதும் வருந்திய தீட்சிதர் சிறையில் அளிக்கும் உணவை உண்ணவும் மனமின்றி, உண்ணு நோன்பு மேற்கொண்டு, அல்லும் பகலும் தன் குலதெய்வமாகிய நெடுங்குழைக்காதரிடம் தம் குறைகளை, தன் கவி மூலம் எடுத்துச்சொல்லத் தொடங்கினுர். இவர் திருமால் மீது தொடுத்த இப்பாமாலையைக் கேட்டு மற்றவர்களும், தம் மனபாரத்தைக் குறைத்துக் கொண்டனர். நாள் ஒன்றுக்கு மூன்று பாடல்களாக வாய்த்திறந்து உரக்கப்பாடி வந்தார். தீட்சிதர் சிறையில் இருக்கும்போது பிறந்த இவ்வந்தாதியே 'மகரநெடுங் குழைக்காதர் பாமாலை அந்தாதி' என்ற பெயர்பூண்டு வைணவத்திற்குப் பெருமை சேர்ப்பதாய் அமைந்தது.

பக்திச்சுவையும், அவலச்சுவையும் மிகுந்து 'காணப்படும் இவ்வந்தாதியில் உவமை, உருவகம், வேற்றுமை, சிலேடை முதலிய சொல்லணிகளும் பொருளணிகளும் அமைந்துசிறந்தன. திருமாலையன்றி வேறு தெய்வங்களையும், மனிதர்களையும் பாட மறுத்தவர் நாராயண தீட்சிதர்.

> காக்கும் தொழிலுனக் கன்றியான
> வேறு கடவுளர்க்கும்
> நாக்கின் கவிகளை நல்கிலேன்நனு
> காதுதுயர்
> நீக்கும் படிகடைக் கண்பார்த் திரட்சி
> நிறையநறை
> தேக்கும் பொழிற்றிருப் பேரையும்
> சேரும் செழும்தருவே !

என்ற பாடல் இதனை வலியுறுத்துவதாக அமைந்துள்ளது.

தாங்கள் படுகின்ற சிறைத்துன்பங்களை வடமலையப்பப்பிள்ளையிடம் சென்று தெரிவிப்பார் யாருமில்லையே என்று ஏங்கும் தீட்சிதர்,

> கண்ணுக்குத் தீங்கு வரும்போ திமை
> வந்து காப்பதுபோல்
> எண்ணுக்கும் நீங்கா வினைதவிர்த்
> தோங் கெமக்கருள்வாய்
> விண்ணுக்குள் ஓங்கும் பொழிற்குரு
> கூரன் விரித்ததமிழ்ப்
> பண்ணுக்குப் பாங்காம் பரமா ! தென்
> பேரைப் பழம்பொருளே !

என்று இரக்கங்கொண்டு பாடுகிருர். இப்பாடலைக் கேட்டு இரக்கங்கொண்ட சிறைக் காவலன் வடமலையப்பபிள்ளையிடம் சென்று தீட்சிதர் நிலைமையினைத் தெரிவித்தான். செய்தி அறிந்த வடமலையப்பப்பிள்ளை

திரு. கா. இராமானுசம், எம்.ஏ.எம்ஃபில்
மதுரை

விரைந்து வந்து, தீட்சிதரையும் மற்றவர்களையும் சிறையிலிருந்து விடுவித்ததோடு, தனக்குத் தெரியாமல் நடந்த தவறுக்கு மன்னிப்புக் கேட்டார். அத்துடன் இச்செயலுக்குக் காரணமாக இருந்த வரித்தண்டலரைப் பதவியிலிருந்து நீக்கியதோடு தண்டனையும் அளித்தார்.

தம்மைச் சிறைவிடுத்த வடமலையப்பப்பிள்ளையின் செயலைப் பெருமாளின் செயலாகவே எண்ணி,

பரனே ! பரையின் பதியே ! விதியே !
படியிற் சரா
சரனே ! நெடும்பரதத்து வனே! சமர்
வேட்டெழுந்த
கரனே முதற்பதி னுலா யிரங்கண்
டகரைவென்ற
உரனே நிகர்முகில் வண்ணு! பாங்காய்
ஈங்குதவினையே

என்று அகமகிழ்ந்து பக்தியுடன் பாடி மகிழ்ந்தார்.

தனக்குத் தீங்கு செய்த வரித்தண்டலரை,

பொய்யாற் பொதிந்த கொடிய வெம்
பாதகன் பொய்யும் வம்பும்
செய்யா தெம்மைச் சிதற தீர்த்தருள்
வாய் செழும் தேராசர்
மொய்யா கவந்தனில் பாண்டவற்
காக முழங்கு சங்கக்
கையா ! கருமுகில் மெய்யா ! தென்
பேரெயிற் காருத்தனே !

என்று வெறுத்துக் கூறினும், பல பாடல்களில் தம் விதிப்பயனே இதற்குக் காரணம் என்றும் குறிப்பிட்டுப் பாடியுள்ளார்.

நூறு பாடல்களைக் கொண்ட இவ்வந்தாதியில் 72 புராண வரலாற்றுக் கூறுகளைக் காண முடிகின்றது. தாம் பிறந்த தென் திருப்பேரைத் தலத்தின் சிறப்பினைப் பல பாடல்களில் விதந்து பல்வேறு பெயர்களில் சுட்டிப் பாடியுள்ளார்.

சங்ககாலத்தில் 'பேரெயில்' என்றும் பின்னர் 'வளரிபதம்', 'பிருஹத்புரம்' என்ற வடமொழி பெயர்களிலும் வழங்கிய தென்திருப்பேரைத் திருப்பதியைப் பேரை, பேரையூர், பேரெயில், தமிழ்ப்பேரை, நற்பேரை, ஸ்ரீபேரை, திருப்பதம், திருப்பேரை, இன்பேரை, தென்பேரை என்ற பெயர்களால் சுட்டி வழங்கியுள்ளார்.

'வழுதிவள நாட' என்று தம் நாட்டு வளத்தையும் 'தென்திரை நீர் எறியும் பொருநைந்துறைவ !' என்று தாம்பிரவாணி நதியின் கூடு புனல் தீர்த்தத்தின் சிறப்பையும், 'நான் மறையின் சங்கமும் கீதத் தமிழ்ப் பாடலும் சப்தசாகரம் போற் பொங்கும் இன்பேரை' என்று தம் ஊரில் வடமொழி தென்மொழிப் புலவோர் நிரம்பியிருந்த தன்மையையும், தம் இனத்தவரிடம் தமக்குள்ள பெருமதிப்பையும், 'பார் வாழி' என்ற பொது நோக்கினையும், திவ்யப்ரபந்தம் சேவிக்கும் வைணவனிடம் தமக்குள்ள பக்தி மிகுதியையும் தம் நூலின் வாயிலாக வெளிப்படுவதையும் உணரமுடிகின்றது.

卐



திரு என்னும் அடைமொழியோடு கூடிய நூல்கள் சிலவே. அவற்றுள் ஒன்று திருமூலர் இயற்றிய திருமந்திரம்.

திருமந்திரப் பாடல்கள் எளிமையானவை. இனிமையானவை. மனிதன் தெய்வமாவதற்கு வேண்டி வழிகாட்டுபவை. திருமந்திரப் பாடல் ஒவ்வொன்றும் நான்கு நான்கு வரிகளைக் கொண்டவை. ஒவ்வொரு வரியும் ஒற்றெழுத்தை — புள்ளியுள்ள எழுத்தை நீக்கிப் பார்த்தால், பன்னிரண்டு எழுத்துக்களையே உடையவை. வேறு எந்த நூலுக்கும் இல்லாத தனிச் சிறப்பு இது.

வாழ்க்கை நிலையாமையைப்பற்றித் திருமந்திரம் கூறும் கருத்துக்கள் இவை. "சற்று முன்தான் சமையல் செய்துவைத்தார். சமைத்துவைத்

# திருமந்திரம்

ததை உண்டார். மனைவியோடு மகிழ்ந்து இருந்தார். இடப்பக்கமாக இரைப்பையில் வலி எடுக்கிறது என்றார். அதனால் கீழே படுத்தார். படுத்தவர் படுத்தவர்தான். எழுந்திருக்கவே இல்லை".

"எலும்பாலும் நரம்பாலும் தோலாலும் வேயப்பட்ட கூரை போன்ற இந்த உடம்பு, பழையதாகிப் பழுதுபட்டு விழுந்துவிட்டால், இத்தனை நாளும் நம்மோடு இருந்து உண்ட மனைவியும் மக்களும் உடன் வரமாட்டார்கள். நாம் பெற்ற அறிவும் செய்த வினையும் தவிர வேறு எதுவும் நம்மோடு வரா".

"பண்டம் பொய்க்கூரை பழகி விழுந்
தக்கால்
உண்ட அப் பெண்டிரும் மக்களும்
உடன் வரார்
கொண்ட விரதமும் ஞானமும்
அல்லது
மண்டி அவருடன் வழி நட வாதே!"

"உடம்பைவிட்டு உயிர் நீங்கிவிட்டால், உற்றார் உறவினர் ஊரார் எல்லோரும் ஒன்றுகூடி ஆரவாரம் செய்து அழுவார்கள். அதுவரையில் உடம்புக்கு வைத்திருந்த பெயரை நீக்கி, அதனைப் பிணம் என்று சொல்வார்கள். இடுகாட்டுக்கு எடுத்துச் சென்று சுட்டெரிப்பார்கள். எரித்துவிட்டு நீரிலே மூழ்குவார்கள். மூழ்கி மெல்ல மெல்ல செத்தவரைப்பற்றிய நினைவைக்கூட அறவே ஒழித்துவிடுவார்கள்".

திருமந்திரம் உடம்பைப்பற்றிக் கூறும் கருத்துகள் இவை :

"உடம்பை நான் முன்னலேயே இழுக்குடையது என்றுதான் எண்ணிக் கொண்டிருந்தேன். உடம்பினுக்குள் அரிய பொருள் ஒன்று இருப்பதைக் கண்டேன். உடம்பினுள் உத்தமன் கோயில் கொண்டிருக்கிறன் என்பதை உணர்ந்து உடம்பினை நான் ஓம்பி வளர்த்து வருகின்றேன்."

"உடம்பு அழிந்தால் உயிர் அழிந்துவிடும். உயிர் உடம்பைவிட்டுப் போய்விட்டால்அதுஞானத்தைத்திடமாகப் பெற முடியாது. ஆகவே உடம்பை நன்கு வளர்க்கும் வழிமுறைகளைக் கண்டு உடம்பை வளர்த்தேன். அதன் மூலம் உடம்பினுள் இருக்கும் உயிரையும் வளர்த்தேன்".

"உடம்பார் அழியின் உயிரார் அழிவர்
திடம்பட மெய்ஞானம் சேரவும்
மாட்டார்.
உடம்பை வளர்க்கும் உபாயம்
அறிந்தே
உடம்பை வளர்த்தேன் உயிர்
வளர்த்தேனே".

உள்ளத்தைப்பற்றித் திருமந்திரம் உரைக்கும் கருத்துக்கள் அழகானவை; ஆழமானவை.

"உள்ளம்தான் பெரிய கோயில். உடம்புதான் ஆலயம். வாய்தான் வள்ளர் பிரானுக்குக் கோபுரவாயில். சீவன்தான்தெள்ளத் தெளிந்தவர்க்கு சிவலிங்கம். ஐந்து புலன்களும்தான் அழகிய மணிவிளக்குகள்".

"ஆராய்ந்து பார்க்கின்றவனுடைய உள்ளத்திலே பால் தரும் பசுக்கள் ஐந்து உள்ளன. ஐம்புலன்களாகிய அந்தப்பசுக்கள்மேய்ப்பவர்இல்லாமல் வெறிகொண்டும் திரிகின்றன. அவற்றை மேய்ப்பவரும் உண்டாகி அவற்றின் வெறியும் அடங்கினுல் அந்தப் பசுக்கள் ஐந்தும் குடம் குடமாய் பாலைச் சொரியுமே!"

"உத்தமராக வாழ்வோரே தம் உள்ளத்தை அடக்க முடியும்; ஒடுக்க முடியும். ஒடுங்கும் நிலை பெற்றுவிட்ட உத்தமரின் உள்ளம் அச்சத்தால் நடுங்குவதில்லை. அங்கே உயிரைப்பிரிக்கின்ற காலனும் இல்லை. துன்பமும் துயரமும் இல்லை. இரவும் இல்லை. பகலும் இல்லை. பற்றினை விட்டுவிட்ட அத்தகையோர்க்குவாழ்வின் பயன் கிட்டாமல் போவதில்லை"

திரு. என். தங்கவேலன்,
வேலூர்.

"ஒடுங்கி நிலைபெற்ற உத்தமர் உள்ளப்
நடுங்குவதில்லை நமனும் அங்கில்லை
இடும்பையும் இல்லை இராப்பகல்
இல்லை
படுபயன் இல்லை பற்று விட்
டோர்க்கே!'

ஆசையைப்பற்றி—வேட்கையைப் பற்றித் திருமந்திரம் சொல்கிறது

"வேதாந்தம் கேட்க விரும்புகிறா ஆன்றோர். ஆனல் வேதாந்தம் கேட்ட பின்னும் அவர்தம் வேட்கையை விட வில்லை. வேதாந்தாம் என்பதே வேட்கையை ஒழிப்பதுதான் வேதாந்தம் கேட்டு அதன் மெய்ப் பொருளை உணர்ந்தவர் வேட்கையை விட்டுவிடுவார்கள். பற்றி நிற்க மாட்டார்கள்."

'ஆசையை அறவே விட்டுவிடுங்கள் ஆசையை அறவே விட்டுவிடுங்கள் ஈசனிடத்தில் வைக்கின்ற ஆசையாயினும் சரி அது வேண்டவேவேண்டாம். ஆசைப்பட ஆசைப்பட துன்பம்தா

# திருமலையில் தங்கு வசதிகளுக்கான நன்கொடைத் திட்டம்

கலியுக வைகுண்டமெனக் கருதப்படும் திருமலையில் நின்றவண்ணம் அருள் புரியும் வேங்கடவனைக் காண நாட்டின் பல முனைகளிலிருந்து ஆயிரக்கணக்கான யாத்திரிகர்கள் திருமலைக்கு நாள்தோறும் வருகை புரிகின்றனர். அவர்கள் திருமலையில் தங்குவதற்கென்று திருமலை திருப்பதி தேவஸ்தானம் பல தர்ம சத்திரங்களையும், குடில்கள், விருந்தினர் விடுதிகள் போன்ற பல தங்கு வசதி கட்டிடங்களையும் கட்டியுள்ளது. வருகை புரியும் யாத்திரிகர்களின் எண்ணிக்கை நாளுக்கு நாள் பெருகி வருவதை மனதிற்கொண்டு மேலும் தற்போது உள்ள விருந்தினர் விடுதி, குடில்களின் மேல் பொதுமக்களின் நன்கொடைத் திட்டத்தின் கீழ் மற்றுமொரு தளத்தினைக் கட்டுவதென்று மேலாண்மை முடிவெடுத்துள்ளது. யாத்திரிகர்/பக்தர்களுக்குத் தொண்டு புரிந்திடும் ஓர் அறிய வாய்ப்பாக இரக்கமனமிக்க பொதுமக்கள் அல்லது தனியார் நிறுவனம் அல்லது அறக்குழு ஆகியன இத்திட்டத்தினைப் பயன்படுத்திக்கொள்ளும் என நம்புகிறோம்.

## முதல் தளம் :

ஆழ்வார் ஏரி, மங்களபாவி, சங்குமிட்டா, சேஷாத்ரிநகர், அஞ்சநாத்ரி, கருடாத்ரிநகர் ஆகிய காட்டேஜ்களின் ஏ மற்றும் பி பகுதிகளின் மேல்கட்டப்பட்டு வரும் 'சி' மற்றும் 'டி' பகுதிகள், 872 முதல் 1012 சதுர அடி பரப்புள்ளதாக இப்பகுதிகள் அமையும். இவ்வொரு பகுதிக்கும் வழங்கவேண்டிய நன்கொடைத் தொகை ரூ. 1. 50 இலட்சமாகும்.

## ராம் பகீச்சா விருந்தினர் விடுதிகள :

ஒவ்வொரு தளத்திலும் 50 அறைத்தொகுதிகள் வீதம் மூன்று தளங்களைக்கொண்ட மூன்று விருந்தினர் விடுதிகள் கட்டப்பட்டு வருகின்றன. இவற்றில் 166 அறைத்தொகுதிகள் நன்கொடையாளர்களுக்கு ஒதுக்கப்பட்டுவிட்டன. 44.5 சதுர மீட்டர் பரப்புள்ள இவ்அறைத்தொகுதிக்கான நன்கொடை தொகை ரூ. 60,000 ஆகும்.

## ஸப்தகிரி சத்திரங்கள :

இச்சத்திரக்கட்டிடம் 9 தொகுதியினைக் கொண்ட 954 அறைகளுடன் விளங்கும். இவற்றில் 913 அறைகள் நன்கொடைத் திட்டத்தின் கீழ் ஒதுக்கப்படும். 12'×14' அளவில் இவ்வறைகள் விளங்கும். இவ்அறைக்கான நன்கொடைத் தொகை ரூ. 40,000 ஆகும்.

## 2-வது விருந்தினர் விடுதி :

சேஷாத்ரி நகரில் இரண்டாவது விருந்தினர் விடுதியில் உள்ள இரண்டு தளங்களில் கட்டப்பட்டுள்ள 26 அறைத் தொகுதிகள் நன்கொடைத் திட்டத்தின்கீழ் ஒதுக்கப்படும். 4.20 மீ × 4.20 மீ பரப்பளவில் இவ்வறைத் தொகுதிகள் விளங்கும். இவ் இரண்டாவது விருந்தினர் விடுதிக் கட்டிடத்திற்காகவோ அல்லது தளம் முழுமைக்கோ நன்கொடை பெற மேலாண்மை விழைகின்றது. விடுதி கட்டிடத்திற்கான நன்கொடைத் தொகை ரூ. 25 இலட்சமாகும்.

மேற்கூறிய இத்தங்கு வசதி கட்டிடங்களுக்கான நன்கொடையினை தனிநபர்/தனியார் நிறுவனம்/அறக்கட்டளை போன்ற எந்தப் பெயரிலும் வழங்கலாம்.

## சலுகைகள்

நன்கொடையாளர் அல்லது அவர் உறவினர்கள் அல்லது நிறுவனத்தின் அல்லது அறக்கட்டளையைச் சார்ந்த உறுப்பினர்களோ அல்லது அவற்றின் அலுவலர்களோ வருடத்தில் 60 நாட்களுக்கு, (ஒரு முறை தங்கிடும்போது 10 நாட்களுக்கு மிகாமல்) இலவசமாக அவர்கள் நன்கொடை அளித்த தங்கு வசதிகளில் தங்கலாம். அவர்கள் நன்கொடை வழங்காத தங்கு வசதிகளில் தங்க நேரிடின், வித்யாசப்படும் வாடகைத்தொகை மட்டுமே அவர்களிடமிருந்து வசூலிக்கப்படும்.

நன்கொடையாளர்களின் பெயர், முகவரி கொண்ட கற்பலகை ஒன்று முதல் தளம்/அறைத் தொகுதி/அறை ஆகியவற்றில் தகுந்த இடத்தில் பொருத்தப்படும். முழு விவரங்களுக்கு :

Executive Officer, T. T. Devasthanams, Tirupati - (A. P.) 517501. எனும் முகவரியுடன் ஆங்கிலத்தில் தொடர்பு கொள்ளவும்.

தரும் பொருள் சிறியதே : பெறும் அருள் பெரிதே:

மிகுதியாகும் ஆசையை விடவிடத் தான் இன்பம் பெருகும்!''

''ஆசை அறுமின்கள் ஆசை அறு
மின்கள்
ஈசனோடு ஆயினும் ஆசை அறு
மின்கள்
ஆசைப்படப்பட ஆய்வரும் துன்
பங்கள்
ஆசைவிடவிட ஆனந்த மாமே''

திருமந்திரம் கூறும் தத்துவக் கருத்துக்கள் சிந்தனையைத் தூண்டுபவை. சிந்தனைக்கு விருந்து அளிப்பவை.

''மரத்தால் செய்யப்பட்ட ஒரு யானை இருக்கிறது. அதனைப் பார்ப்பவர் யானையின் உருவிலே கருத்தைச் செலுத்தினால் அவர்க்கு மரம் தெரிவதில்லை. யானைதான் தெரிகிறது. ஆனால் யானையின் உருவில் கருத்தைச் செலுத்தாமல் மரத்தின் தன்மையில் கருத்தூன்றினாலோ அங்கு யானை தெரிவதில்லை. மரம்தான் தெரிகிறது. ஒரு நோக்கில் மரத்தை மறைக்கிறது யானை. இன்னொரு நோக்கிலோ மரத்தில் மறைந்துவிடுகிறது யானை. அதுபோலத்தான் நாம் பஞ்சபூதங்களைப் பார்க்கையில் பரமன் நமக்குத் தெரிவதில்லை. பரமனைப் பார்க்கின்றபோதோ பஞ்சபூதங்கள் தனியாகத் தெரிவதில்லை. ஒரு நோக்கில் பரத்தைப்பஞ்ச பூதங்கள் மறைத்துவிடுகின்றன. மற்றொரு நோக்கில் பரத்தில் மறைந்துவிடுகின்றன பார் முதலாகிய ஐந்து பூதங்கள்!''

''மரத்தை மறைத்தது மாமதயானை
மரத்தில் மறைந்தது மாமதயானை
பரத்தை மறைத்தது பார் முதல்
பூதம்
பரத்தில் மறைந்தது பார் முதல்
பூதம்,''

''பதி என்பது இறை; பசு என்பது உயிர்; பாசம் என்பது உலகம். பதி பசு பாசம் என்கின்ற மூன்றில் பதியைப்போலவே பசுவும் பாசமும் கூட அநாதியானவை. என்றும் இருப்பவை. பசுவும் பாசமும் சேர்ந்திருக்கையில் அவை பதியை அணுக முடியாது. பசுவானது பதியை அணுகினால் பாசம் நில்லாமல் ஓடிவிடும். பாசத்தை விட்டால்தான் பசு, பதியைச் சென்று அடைய முடியும்!

''அன்பு வேறு சிவம் வேறு அல்ல. அன்பும் சிவமும் இரண்டு என்றுசொல்பவர் அறிவில்லாதவர்! அன்பே தான் சிவமாய் நிற்கிறது என்பதை யாரும் அறிவதில்லை அன்புதான் சிவமாய் இருக்கிறது என்பதை யாவரும் அறிந்து கொண்டால் அன்பே சிவமாய் அவர்கள் நிலைத்து அமர்வார்கள்!''

''சீவன் வேறு இல்லை. சிவன் வேறு இல்லை. சீவன் சிவனை அறியவில்லை. அவ்வளவுதான். சீவன் சிவனை அறிந்து கொண்டுவிட்டால் சீவனே சிவனாகி விடும்!''

''எண்ணாயிரம் ஆண்டுகள் தவம் செய்து பார்த்தாலும் முகக் கண்ணால் அமுதம் போலும் இறைவனைக் கண்டறிய முடியாது! உள்ளத்தின் உள்ளே ஒளியோடு நோக்கினால் கண்ணாடியில் காண்போர் உருவம் தெரிவது போல் நம் உள்ளேயே இறைவன் கலந்திருப்பதைக் காணலாம்!''

''தன்னை அறிதல் என்பது தன் உள்ளே இருக்கும் இறைவனை அறிதல். தன்னை அறிந்த தத்துவ ஞானிகள் எடுத்திருக்கும் இப்பிறவிக்குக்காரணமான முன் வினைகளின் முடிச்சை அவிழ்த்துவிடுவார்கள். மேலும் பிறவி வரக் காரணமான பின்வினைகளைப் பிடித்துப் பிசைந்து இல்லாமல் செய்துவிடுவார்கள். சென்னியில் வைத்த சிவன் அருளால் அவருக்கு இனி பிறவித்துன்பம் என்பது இல்லை!''

''தன்னை அறிந்திடும் தத்துவ
ஞானிகள்
முன்னை வினையின் முடிச்சை
அவிழ்ப்பார்கள்
பின்னை வினையைப் பிடித்துப் பிசை
வார்கள்
சென்னியில் வைத்த சிவன்
அருளாலே''.

உள்ளத்தை தூய்மையாக்கிநம்மா உத்தமராவதற்கு திருமந்திரம் கூறும் அறநெறிகள் நாம் படித்துணர்ந்து பின்பற்றவேண்டியவை.

''கொலை, களவு, கள், காமம் பொய் என்னும் ஐந்து பெரும்பாவங்களை நாம் செய்யக்கூடாது. அவற்றை நீக்கிவிட வேண்டும். அவற்றை நீக்கினால்தான் தலைவணாகிய சிவனடியைச் சார்ந்து இன்பமுற முடியும். ஞான ஆனந்தம் என்னும் அறிவின்பத்தில் இருப்பவர் இந்தப் பாதகங்களின் பக்கம் போகமாட்டார்கள்''.

''வஞ்சகம் பேசி அறம் கெடும்படியாக வாழாதீர்கள். பிறர் பொருளின் மீது ஆசைவைத்து அதனைக் கவராதீர்கள். செம்மையான வாழ்க்கை நடத்துபவர்களாகிய நீங்கள் உண்ணுகின்றபோது ஓர் அகப்பை அன்னத்தையாவது பிறர்க்குக் கொடுத்துவிட்டு உண்ணுங்கள்! அதுவே நல்லநெறி''.

''அவ்வியம் பேசி அறங்கெட நில்லன்
மின்
வெவ்வியன் ஆகிப் பிறர் பொருள்
வவ்வன்மின்!
செவ்வியன் ஆகிச் சிறந்துண்ணும்
போதொரு
தவ்விக் கொடுண்மின் தலைப்பட்ட
போதே''.

''சினத்தை விட்டு விடுங்கள். அதனை வெற்றி கொள்ளுங்கள். எவ்வளவு தூரம் செல்கின்றதோ அவ்வளவு தூரம் உங்கள் சிந்தையைச் செலுத்தி செயல்படுங்கள். இரவும் பகலும் அருள் உணர்வோடு தூங்கி மகிழ்ந்தால் கல்லும்கூடப் பிளந்து சுத்த வெளியாகிய பிரம்மம் ஆகிவிடும்''.

''எங்கும் தங்கி இருக்கும் இறையாற்றல் ஒன்றுதான் என்பதை உணர்ந்தவர்கள் சமரச நோக்குடையவர்களாக இருப்பர். எந்த அளவும் வேறுபாட்டைக் கருதமாட்டார்கள். எவ்வுயிரையும் தம்முயிரைப்போல் எண்ணுவார்கள். ஒத்த உரிமை உடையவர்களாகி மகிழ்வார்கள். இந்தச் சமரச நோக்கைப்பற்றித் திருமந்திரம் சொல்வது இது.''

# தி. தி. தேவஸ்தான சமய நூல்கள்

## தமிழ்

| | | ரூ. காசு |
|---|---|---|
| 1. | ஸ்ரீ வேங்கடேச சுப்ரபாதம் (ஸ்தோத்ரம், ப்ரபத்தி, மங்களா சாஸனங்களுடன்) | 0—50 |
| 2. | ஏழுமலை யாத்திரை — திரு. டி. கே. நாராயணன் | 0—75 |
| 3. | அன்னமய்யா ஓர் அறிமுகம் டாக்டர். பொன். சௌரிராஜன் டாக்டர். கே. சர்வோத்தமன் | 1—00 |
| 4. | பகவத் சந்தேசம் (தமிழாக்கம்) டாக்டர். பொன் சௌரிராஜன் | 0—50 |
| 5. | இந்து சமயக் கையேடு (தமிழாக்கம்) அ. நடராஜன் | 1—50 |
| 6. | நித்யாநுஸந்தானம் (வடகலை) | 4—00 |
| | நித்யாநுஸந்தானம் (தென்கலை) | 4—50 |
| 8. | சித்திரத்திருப்பாவை — பி. ஸ்ரீ. | 8—25 |
| 9. | கண்ணன் பேசுகிறான் —நஜன் | 0—50 |
| 10. | சுவாமி பட்டினத்தார் டாக்டர். ஜி. டி. கோபாலகிருஷ்ண நாயுடு | 1—00 |

## சம்ஸ்கிருதம்

| | | |
|---|---|---|
| 1. | ஸ்ரீ வேங்கடேஸ்வரா அஷ்டோத்ர ஸகஸ்ரநாமம் | 0—62 |
| 2. | அலங்கார ஸங்ரஹம் —சி. கே. பாஸ்கரராவ் | 16—00 |
| 3. | கடோபநிஷத் —டாக்டர். கே. சி. வரதாசாரியார் —டாக்டர். டி. தாதாசாரியார் | 15—00 |
| 4. | க்ரியாதிகாரா — தொகுத்தவர் : டாக்டர். எஸ். பி. ரகுநாதாசாரியா | 25—00 |
| 5. | மார்க்கண்டேய ஸம்ஹிதா | 18—00 |
| 6. | ப்ரஸ்னோபநிஷத் | 11—00 |
| 7. | ஸ்ரீ வேங்கடேஸ்வர சுப்ரபாதம் | 0—12 |
| 8. | சீதாராமாஞ்சநேயம் டாக்டர். டி. அர்க்கசோமயாஜி | 50—00 |
| 9. | தத்வ சாங்க்யானம் —திரு. ஆர். ராமமூர்த்தி சர்மா | 2—00 |
| 10. | பிரம்மசூத்ர பாஷ்யம்-தொகுதி - 1 திரு. —ஆர். ராமமூர்த்தி சர்மா | 30—00 |

மேற்படி நூல்களுக்கான தொகையை வங்கி டி. டி. அல்லது எம். ஒ. மூலமாக அனுப்பி பெற்றுக்கொள்ளலாம். வி. பி. பி. மூலமாக நூல்கள் அனுப்புதல் இயலாது. நூல்களுக்கு "உதவி செயலாட்சித் தலைவர்(எஸ்), நூல் வெளியீட்டுப் பிரிவு, தி.தி.தேவஸ்தானம், திருப்பதி" எனும் முகவரியுடன் ஆங்கிலத்தில் தொடர்பு கொள்ளவும்.

"மனித குலம் ஒன்றுதான்! அந்தக் குலத்தைப் படைத்த இறைவனும் ஒருவன்தான்! நல்லவற்றையே எப்போதும் நினையுங்கள்! காலன் உங்களை ஒன்றும் செய்யமாட்டான். நீங்கள் சென்று புகுவதற்கு என்று தனியாக ஒரு வானுலகம் இல்லை. உங்களுடைய சித்தத்தில் நின்று நிலை பெற்ற அந்த ஒரே இறைவனை நினைத்து உய்யுங்கள்".

"ஒன்றே குலமும்! ஒருவனே தேவனும்
நன்றே நினைமின் நமனில்லைநாணுமே
சென்றே புகுங்கதி இல்லைநும்சித்தத்து
நின்றே நிலைபெற நீர் நினைந்து
உய்ம்மினே!"

"ஊர் என்னவோ ஒன்றுதான். அந்த ஊர்க்குச் செல்கின்ற வழிகள் தாம் ஆறு என்பது போல், அறுவகைச் சமயங்கள் உள்ளன. எல்லாச் சமயங்களும் இறைவனையடையவே வழி காட்டுகின்றன. இந்த உண்மையை அறியாமல் இது நல்ல சமயம், அது தீய சமயம் என்று சொல்கின்ற மாந்தர்கள் குன்றைப் பார்த்துக் குரைக்கின்ற நாய்கள் போன்றவாரே' 'இறைவனின்தன்மையையும் பெருமையும் திருமந்திரம் எப்படி எடுத்துச் சொல்கின்றது தெரியுமா?

"இறைவன் வானத்தில் இருப்பதாகத் தேடும் மதியற்றவர்களே! தேனுக்குள் சுவை செறிந்திருப்பதைப் போல, ஊனுக்குள் அல்லவா இறைவன் ஒளிந்திருக்கிறான். அவனை உள்முகமாக நோக்கி உணர்ந்தறியுங்கள்'

"சொற்களால் எடுத்து உரைக்க முடியாத ஒன்றைப்பற்றி உரைக்கின்ற மையர்களே! கரையில்லாத ஒன்றின் கரையைக் காண முடியுமா? அலையற்ற நீர்போல் சிந்தை தெளிந்திருப்பவர்க்கு இறைவன் புரையற்றுக் காட்சித் தருகிறான்".

"எங்கள் தலைவனாகிய இறைவனின் பெருமையை அறியவல்லவர் யார்? அறிந்தவர் யார்? அவனுடைய அகலத்தையும், நீளத்தையும் அறிய வல்லவர் யார்? அறிந்தவர் யார்? பெருஞ்சுடராக இருக்கின்ற பெயர் தெரியாத ஒன்றின் வேரினைக் கண்டு பிடிக்க முடியாமலேதான் பேசிக் கொண்டிருக்கிறோம்! என்ன விந்தை இது!"

"ஆரறிவார் எங்கள் அண்ணல்
பெருமையை?
ஆரறிவார் இந்த அகலமும் நீளமும்?
பேரறியாத பெருஞ்சுடர் ஒன்றதின்
வேரறியாமை விளம்புகின் றேனே!"

அமர மொழி :

नृत्तावसाने नटराजराजो ननाद ढक्कां
नवपंचवारं ।
उद्धर्तुकामः सनकादिसिद्धानेतद्विमर्शे
शिवसूत्रजालं ॥

ந்ருத்தாவஸாநே நடராஜராஜோ
நநாத டக்காம் நவ பஞ்சவாரம் |
உத்தர்த்து காம: ஸனகாதி ஸித்தான்
ஏதத் விமர்சே சிவ ஸூத்ர ஜாலம் ||

'ஆனந்தக் கூத்தின் இறுதியில் நடமிடுபவர்களின் மேலான நாயகனை இறைவன் தனது டக்கா எனப்படும் உடுக்கையை பதினைன்கு (9+5) முறை அசைத்து ஒலி எழுப்பினன். ஸனகர் முதலிய சித்தர்களின் உய்வின் பொருட்டு எழுந்த இந்த ஒலி பதினைன்கு சிவ சூத்திரங்களை உண்டு பண்ணிற்று. இவற்றை இப்போது விளக்குவோம்."

டையதாக உரிமை பாராட்டி ஏற்கிறுர்கள்."

மொழியும் பிராணிகளும் :

உலகில் உள்ள எல்லா உயிரினங்களும் தங்களுக்குள் அளவளாவிக் கொள்கின்றன. கருத்துப் பரிமாற்றங்கள் செய்து கொள்கின்றன. ஒவ்வொரு உயிரினமும் பலவகை ஒலிக் குறியீடுகளை இவற்றிற்கான கருவியாகக் கொண்டுள்ளன. உந்துணர்வின் மூலம் செயற்புரியும் பிராணி இனங்களின் மொழி சில குறிப்பிட்ட எல்லைகளுடன் நின்று விடுகிறது.

உந்துணர்விற்கு அப்பால், அதனை செம்மையாக இயக்க வல்ல பகுத்தறிவு என்ற ஆற்றல் மனிதனிடத்து உள்ளது. இதுவே இவனை மனிதனுக இருக்க வைக்கிறது. இது இல்லையேல் இவனும் பிராணிதான். சரியான மொழியாகிய மை தேவை. ஒருவனது தனி வாழ்விற்கும் சமுதாய வாழ்விற்கும் இன்றியமையாதது மொழி. இம்மொழியின் தரத்தைப் பொறுத்தே சமுதாயத்தின் தரம் நிச்சயிக்கப்படுகிறது.

எனவே, மனித இனம் மிக உயரிய நிலையில் விளங்க வேண்டுமென்றல் அது கைக் கொள்ளும் மொழியும் அதற்கு ஏற்றதாகத்தானே இருக்க வேண்டும். இதனைக் கருத்தில் கொண்டே படைப்புக் கடவுளாம் பிரஜாபதியும் 'வாக்கை' ரிஷிகள் என்று சொல்லப்படும் அறிவிற்குக் கொடுத்தார். பிரஞ்ஞையாகிய அறிவு பலவாறுக ஆராய்ந்து பல நிலைகளினின்று வெளிப்படும் ஒலி மாற்றங்களுக்கு ஏற்ப எழுத்துக்களை அமைத்தது. இவையே 'அக்ஷரங்கள்' எனப்பட்டன. அக்ஷரம் என்றல் என்ன

# வேத நல் விளக்கு

ஸ்ரீ இராமானுஜ ஸ்வாமிகள்,
கும்பகோணம்.

மொழியும் வேதமும் :

வேதங்களைப் பற்றி அறியுமுன் வேத மொழியான சம்ஸ்கிருதத்தைப் பற்றி அறிதல் இன்றியமையாதது. ஹிந்துக்களாகிய இந்தியர்களின் வேத நாகரீகம் வளர்ந்தது சம்ஸ்கிருத மொழியில்தான். எல்லாம் உள்ள இம்மொழியின் பெருமை பற்றியும் அது ஏற்றி வைத்துள்ள வேத தீபத்தின் ஒளி பற்றியும் மோனியர் வில்லியம்ஸ் நயம்படக் கூறியுள்ளார்:

"இந்தியா ஐநூறுக்கும் அதிகமான தேச பாஷைகளைக் கொண்டிருப்பினும், ஹிந்துக்கள் ஒரே ஒரு மொழியையும் ஒரே ஒரு இலக்கியத்தையும் மட்டும் ஏற்கிறுர்கள், போற்றுகிறுர்கள், மதிக்கிறுர்கள். இவர்கள் மொழியால், இனத்தால், தேசத்தால், பழக்க வழக்கங்களால் மாறுபட்டிருக்கலாம். எனினும் சம்ஸ்கிருத மொழியையும் வேதத்தையுமே இவர்கள் அனைவரும் உவந்து தங்களு இவன் எவ்வாறு இருக்கிறுன்? இயங்குகிறுன்?

மொழியும் மனிதனும் :

மனிதன் மனதை மையமாகக் கொண்டு இயங்குபவன். சமுதாயமாகிய வண்டிக்கு மனிதன் சக்கரம் என்றல், அதன் மைய அச்சை மனம் என்று சொல்லலாம். மைய அச்சிலிருந்து சக்கரத்தை நழுவாமல் காப்பது கடையாணியாகிய அறிவு. வண்டி அச்சிற்கும் சக்கரத்திற்கும் இடையே பூசப்படும் மை போன்றதே மொழி.

அச்சைவிட்டு நழுவாமல் சக்கரத்தையும், வண்டியையும் காப்பது கடையாணி. அது போன்று சமுதாயத்தை விட்டு, மனதை விட்டு நழுவாமல் மனிதனைக் காப்பது அறிவு. இவை தேய்வின்றி இயங்க, பொருத்தமற்ற அல்லது தேவையற்ற 'கீச்சு, கீச்சு' என்ற ஒலி எழாமலிருக்க, சரி என்று அறிந்து கொண்டாலே அக்ஷரத்தின் பயனையும் புரிந்து கொண்டாலே மொழியைப் பற்றியும், அதனைக் கருவியாகக் கொண்டு இயங்கும் சமுதாயத்தைப் பற்றியும் அறிந்து கொள்ள முடியும்.

அக்ஷரம் :

சம்ஸ்கிருதத்தில் எழுத்திற்கு அக்ஷரம் என்று பெயர். இப்பெயர் மிக விரிவான பொருளுடையது. 'அ' காரம் துவங்கி 'க்ஷ' காரம் வரையிலான ஐம்பது எழுத்துக்களைக் கொண்ட வர்ண மாலை அக்ஷர மாலை எனப்படும். ஒரு முத்து மாலையிலுள்ள யாவுமே முத்துதானே. ஒவ்வொரு எழுத்துமே அக்ஷரம் என்று அழைக்கப்பட்டது. 'அகாராதி க்ஷகாராந்த வர்ண ஜாதகளேபரம்.'

இவற்றுடன் 51-வது அக்ஷரமாக 'ள' (ळ) காரம் சேர்க்கப்படுவது பற்றி மந்திர தந்திர சாஸ்திரங்கள்

பிரிவாகக் கூறும். இவை மனித முயற்சியால் கண்டுபிடிக்கப்பட்டவை யல்ல. தேவ நிர்மாணம். தேவநாகரீ.

அக்ஷரம் பிரம்ம பரமம். அக்ஷரம் மேலான பிரும்மமே என்று ஸ்மிருதிகள் கூறும். அமர கோசத்தின்படி அக்ஷரம் என்பது முக்தியையும் குறிக்கும். 'அக்ஷரம் து மோக்ஷே அபி' அழிவற்றது, குறைவற்றது, மாறுபாடுகளற்றது அக்ஷரம். பிரும்மம்.

**அக்ஷராப்பியாசம் :**

குழந்தைகளுக்கு முதன் முதல் கல்வி கற்றுத்தரத் துவங்குவதையே 'அக்ஷராப்பியாசம்' என்று கூறுவர். எழுத்தைக் கற்றலே இது முதல் நிலையில் குறிக்கும். ஒருவன் வாழ்நாளில் கற்கும் கல்வி யாவற்றையுமே 'அக்ஷராப்பியாசம்' என்று சொல்லலாம்.

ஒருவனது கல்வி பிரும்மத்தை அறிவதற்கு ஒரு அப்பியாசமாக அல்லது பயிற்சியாக ஆவதாலும், தெரிந்தோ அல்லது தெரியாமலோ ஒவ்வொரு உயிரின் உள்ளும் சாக்ஷியாக அமர்ந்து பார்த்துக் கொண்டு இருக்கும். அக்ஷரமான பரம புருஷனின் சன்னிதியிலேயே அவனுல், அவன் பொருட்டு யாவும் இயங்குவதாலும் உலகின் இயக்கம் யாவுமே அக்ஷராப்பியாசந் தான்.

**அக்ஷரம்-பிரம்ம வாசகம் :**

ஒருவன் சென்னையிலிருந்து கிளம்பித் திருப்பதி செல்கிருன் என்று கொள்வோம். செல்லும் வழியில் 'திருப்பதி...கி.மீ' என்று எழுதப்பட்ட பெயர்ப் பலகைகளைக் காண்கிருன். இவை வழிகாட்டிகளாக விளங்கும். கடக்க வேண்டிய தூரத்தையும் குறிக்கும். பயணத்தின் எல்லையை நெருங்கிக் கொண்டிருக்கிருன் என்பதையும் குறிப்பால் உணர்த்தும்.

திருப்பதி வந்து விட்டது. திருப்பதி நகரின் நுழைவு எல்லையில் 'திருப்பதி' என்று பெயர் தாங்கிய பெரிய பெயர்ப் பலகை ஒன்று இருக்கும். பயணம் செய்பவன் இதனைக் கண்டவுடன், 'ஆ! திருப்பதி வந்துவிட்டது' என்கிருன். இந்த பெயர்ப் பலகையே திருப்பதியா என்ன? திருவேங்கடவன் உறையும் திருமலையையும், பிராட்டியின் திருக்கோயிலையும் மற்றும் பற்பல நிறுவனங்கள், தொழிற்சாலைகள், மக்கள், பரப்பளவு இன்னோரன்ன பலவற்றையும் இப்பெயர்ப் பலகை சொல்லா நிற்றலின் இதனைப் பார்த்த உடனேயே 'திருப்பதி வந்து விட்டது' அல்லது 'திருப்பதி வந்து விட்டோம்' என்கிருேம்.

அதுபோன்றே பரம்பொருளையும், அதன் சொல்லொணு பிரபாவங்களையும் சொல்வதாலும், அக்ஷரமாகிய பரம்பொருள் இதோ உறைகிறது என்று காட்டுவிப்பதாலும், எழுத்து அக்ஷரம் எனப்படுகிறது.

நெடுந்தூரம் பயணித்து வந்த ஒருவன்'திருப்பதி'என்ற பெயர்ப் பலகையைக் கண்டவுடனேயே, 'அப்பாடா! திருப்பதி வந்து விட்டோம். இனி தாயாரையும்பெருமாளையும்சேவித்து விடலாம்,' என்று திருப்தி யடைகிருன், நம்பிக்கை பெறுகிருன்.

அது போன்று புல்லாய்ப் பூடாய்ப் புழுவாய் மரமாகிப் பல் மிருகமாகிப் பலவாருகப் பிறப்பெடுத்து, பிறவிப் பயணத்திலே களைத்து, தட்டுத் தடுமாறி முன்னேறி மனிதப் பிறவியை அடைந்த ஜீவன் 'பிரம்ம வித்யை' என்று சொல்லப்படும் அக்ஷராப்பியாசத்தைக் கைக் கொண்டவுடனேயே, 'அப்பாடா! அக்ஷரத்தின் சன்னிதிக்கு வந்துவிட்டோம். அக்ஷராப்பியாசமும் துவங்கிவிட்டோம். இன்னும் சிறிது முயன்று பயணித்தால் மூலப் பிரகிருதியாம் பிராட்டியையும் தரிசித்துவிடலாம், பின் அவன் அருளைத் துணையாகக் கொண்டு ஏழு நிலைகளையும் கடந்து மேலே ஏறி பரமனையும் தரிசித்து விடலாம். பிறவிப் பயனையும் பெற்று விடலாம்', என்று திருப்தி யடைகிருன். நம்பிக்கை பெறுகிருன்.

பரா, பச்யந்தீ, மத்யமா, வைகரீ என்ற நான்கு நிலைகளுள் அக்ஷரம் சப்தமாக வெளி வருவது வைகரீ நிலையில்தான். இவ்வாறு வெளி வரும் சப்தமும் தாலு முதலிய ஸ்தானங்கள், வாயு அபிகாதமான முயற்சி, இதனுல் எழும் நாதம் என்ற த்வனி, வர்ணங்கள், பதம், வாக்கியம், வாச்சியார்த்தமான விஷயம் ஆகிய எட்டு நிலைகளைக் கொண்டே பூரணமடைகிறது.

பராநிலையில் அக்ஷரமே பிரம்மமாயிருக்கிறது. அந்த பிரம்ம சைதன்யமே பல நிலைகளையும் மாறுபாடுகளையும் கடந்து வைகரீ நிலையில் எழும் ஒலி வடிவாகி, அதன் நாத வடிவாகி, அந்த நாதத்தின் எழுத்து வடிவாகி, எல்லா அக்ஷரங்களையும் உருவாக்கி, தானே அவ்வக்ஷரங்களின் சக்தியாகவும் ஆகி அழியா வேத நல்விளக்காய் ஒளிர்கிறது. அதிகம் சொல்வானேன்! ஒவ்வொருவனும் பேசும் எல்லா மொழியும் பிரம்ம வாசகமே.

**சம்ஸ்கிருத மொழி :**

வாழ்வின் தத்துவத்தையும் முழுமையான உணர்வுகளையும் உணர்ச்சித் துடிப்பின் ஸ்வரத்திலேயே சிறிதுகூட சுருதி மாருமல் வெளிப்படுத்துவதில் சம்ஸ்கிருதத்திற்கு நிகர் சம்ஸ்கிருதம்தான். இதனுல்தான் வேதம் முதலிய எல்லா சமய நூல்களும் இன்றும் உயிரோட்டத்துடன் திகழ்வதையும், கற்பவரிடத்துப் புத்துணர்வூட்டுவதையும் காண்கிருேம்.

சம்ஸ்கிருதம் எப்போது, யாரால் தோற்றுவிக்கப்பட்டது என்பது இன்று வரையில் எந்தமொழி ஆய்வாளர்களாலும் தீர்மானிக்கப்படவில்லை. எனவேதான் நாம் இம்மொழியை அநாதி என்றும், அபௌருஷேயம் என்றும் சொல்கிருேம்.

ஆதிகாலம் துவங்கி இன்று வரையில் பேச்சு வழக்கில் உள்ள தேச பாஷை எதுவாயிருப்பினும் மதத் தொடர்பான ஆய்வுகள் யாவும் சம்ஸ்கிருதத்திலேயே நடந்து வருகின்றன. எனவேதான் இம்மொழி

என்றும் இளமையாய் மயக்கும் அழகுடையதாக விளங்குகிறது. அமர வாழ்வும், மதமும், மொழியும் ஊடு பாலோட்டமாகப் பரவி நிற்கின்றன.

சமணர்கள், பௌத்தர்கள் துவங்கி இன்று வரையில் பலர் இம்மொழியை எதிர்க்கத் துவங்கி இறுதியில் அதற்கு அடிமையாயினர் என்பது வரலாறு புகட்டும் உண்மை.

விஞ்ஞான முறையில் மெய் ஞானத்தை விளக்க எழுந்த மொழி யாதலின் எல்லாக் கலைகளும் இம் மொழியின் மூலமே வளர்க்கப்பட்டன. இது கலைகள் யாவற்றிற்கும் உயிர் அளிக்கும் அமுத ஊற்றாக இருந்தது. கலைகள் செழுமையுடன் வளர்ந்ததும், வளர்வதும் இம்மொழி யின் வளத்தினால்தான்.

பேசப்படும் மொழிக்கு, பேச்சை அப்படியே எழுத்து வடிவில் வெளிப் படுத்தும் மொழிக்கு 'பாஷை' என்று பெயர். சம்ஸ்கிருதம் இன்றும் வளங் குன்றாமல் இருப்பதே அதன் அமரத் தன்மைக்கு எடுத்துக் காட்டு. உலகம் என்பது உயர்ந்தோர் மாட்டே ஆத லின் அறிஞர் கூட்டத்தில் வழக் கொழிந்து போகாமல் இருப்பதே இம் மொழியின் அழிவற்ற தன்மைக்கு எடுத்துக் காட்டாகும்.

இலக்கணப் பிழையின்றி சம்ஸ் கிருதத்தில் உரையாட வல்லவர்கள் சிஷ்டர்கள் என்று அழைக்கப்பட்டனர். இவர்கள் பேராசையற்ற வர்களாக, பயனில் விருப்பின்றி செயற்புரியும் யோகிகளாக வாழ்ந் தனர். அன்றைய சமூகம் இத்தகை யோரையே பிழையற்றவர்கள் எனக் கருதியது. பிழையற வாழ்பவர்களே மொழியைப் பிழையறக் கற்பார்கள். கற்பிப்பார்கள் என்றும் கருதியது.

சில மொழிகளைப் போன்று தன்னைக் கட்டுப்படுத்திக் கொண்டு விடாமல், எல்லாக் காலங்களிலும், எல்லாத் தன்மைகளிலும் சம்ஸ்கிருதம் தன்னை மேன்மேலும் வளர்த்துக் கொண்டும், வளப்படுத்திக் கொண்டும் வந்திருக் கிறது. எழுதாக்கிளவி என்று சொல் லப்படும் வேதம் தோன்றிய காலம் தொட்டே சம்ஸ்கிருதத்திற்கு எழுத்து வடிவம் உண்டு.

பாணிணீய வியாகரண சூத்திரம் எழுவதற்கு முன்னதாகவே வேதங் களும் இதிகாச புராணங்களும் பிர பலமாக இருந்தன. தொட்ட இட மெல்லாம் சுவை ஊறும் அமர இலக் கியங்களுக்கன்றோ பாணினி இலக் கணம் எழுந்தது.

சம்ஸ்கிருத மொழி நித்யமானது (அழிவற்றது) மட்டுமல்ல, இது நியதமுமாகும். அதாவது தொகுக்கப் பட்டுள்ள எழுத்துக்களின் வரிசை யும் முறையும் மாற்றப்பட முடி யாதது என்று பொருள்.

வர்ணா நு பூர்வீ கல்வபி ஆம்நாயே
நியதாஸ்ய வாம சப்தஸ்ய ||

தேவ பாஷை :

சம்ஸ்கிருதத்தை தேவ பாஷை என்று சாஸ்திரங்கள் கூறும். 'கீர் வாண வாணீ'. பரிணாம வளர்ச்சியில் மிக உயரிய மனிதப்பிறவியை அடைந் திருக்கும் மனிதன் இதற்கு அடுத்த நிலையான தேவ நிலையை அடைய வேண்டும். தேவ ஜீவனம் பெற வேண் டும். இம்மொழியும், இதன் இலக் கியங்களும் பாடுபடுவது இதன் பொருட்டேயாம். தேவ ஜீவனத் திற்கு, அமர வாழ்விற்கு மனிதனை உயர்த்தும் பாஷை தேவ பாஷை யாயிற்று. அமர மொழியாயிற்று.

இதனைத்தான் மகாகவியான தண்டி தனது 'காவ்யா தர்ச'த்தில் 'ஸம்ஸ்கிருதம் நாம தைவீ வாகன் வாக்யாதா மஹரிஷிபி: संस्कृतं नाम दैवी वागन्वाख्याता महर्षिभिः ।।" என்று கூறுகிறார். அவ்யாகிருதா தேவ பாஷா காலே வ்யாகிருதம் அபஜத் | ததானீம்'ஸம்ஸ்கிருதம்''அபிஹிதம்'|| வாக்படாலங்காரமும் 'ஸம்ஸ்கிருதம் ஸ்வர்க்கிணாம் பாஷா சப்த சாஸ்த் ரேஷு நிஸ்ச்சிதா' என்று கூறும்.

சப்த சாதனம் :

வேதத்தின் ஆறு அங்கங்களுள் வியாகரணமும் ஒன்று. இது வேதத் திற்கு விளக்கம், வேத மொழிக்கு விரிவுரை. எனவே வியாகரணத்தின் குறிக்கோள் வேதத்தின் குறிக்கோளி னின்று விலகிச் செல்ல முடியாது. வேதம் பிரம்ம வித்யை என்றால், வியாகரணம் சப்த சாதனம்.

பல துவாரங்கள் உள்ள ஒரு குடத் தினுள் வைக்கப்பட்டிருக்கும் தீபத் தின் ஒளி எல்லா துவாரங்கள் மூல மாகவும் எங்ஙனம் பீறிட்டுக் கொண்டு வருமோ அதுபோல ஒவ் வொருவனிடத்துள்ளும் உறையும் ஜோதி வடிவான பிரம்மமே, அக்ஷ ரங்களின் மூலமாக வெளிப்படுகிறது. இதனால் சப்தம் அல்லது சொல் ஒரு பொருளைப் பிரகாசப்படுத்துகிறது, காண்பிக்கிறது அல்லது வெளிப் படுத்துகிறது என்று கூறுகிறோம். நீக்கமற நிறைந்திருக்கும் பிரம்மத் தின் வெளிப்பாடே சப்தம். 'வர்ண ஞானம் வாக் விஷயோ யத்ர ச ப்ரஹ்ம வர்த்ததே.'

वर्णज्ञानं वाग्विषयो यत्र च ब्रह्म वर्तते ।।

மகா பாஷ்யம் இதனை மிக அழ காகக் கூறும்.

सोऽयं अक्षर समाम्नायो वाक्समाम्नायः पुष्पितः ।
फलितचन्द्रतारकवत् प्रतिमण्डितो वेदितव्यो
ब्रह्मराशिः ।।

ஸோஅயம் அக்ஷரஸமாம் நாயோ
வாக் ஸமாம் நாய:
புஷ்பித: பலித சந்த்ர தாரகவத் ப்ரதி
மண்டிதோ வேதி தவ்யோ ப்ரஹ்ம
ராசி: ||

சப்தத்தை நித்யமென்றும், காரிய மென்றும் இரண்டாகப் பிரிக்கலாம். நித்தியம் என்பது பரா நிலையில் சப்தம் பிரம்மமாகவே இருக்கும் சப்தபிரம்ம வடிவம். அக்ஷரம் வாயிலாக வெளிப் படும்போது இதுவே காரியமாக பரிண மிக்கிறது.

இதனால்தான் 'வாக்'கை பிரம்ம மாக உபாசிக்க வேண்டும் என்று வேதம் கூறுகிறது. 'நமோ வாசம் ப்ரஹ்மேத்யுபாஸ்தே.'

*

(16-ம் பக்கத் தொடர்ச்சி)

" நாதனைநர சிங்கனை நவின்று
ஏத்துவார்கள் உழக்கிய
பாததுளி படுதலால் இவ்
வுலகம் பாக்கியும் செய்ததே"

(நா. திவ். 365)

என்பது அவர்களுடைய துணிவாகும். தொண்டர் குழாத்தில் சேர்ந்து, இறைவனைப் போற்றுவதில் அவர்கள் பேரின்பம் கண்டனர்.

" தூ ராத மனக்காதல் தொண்டர்
தங்கள்
குழாம் குழுமித் திருப்புகழ்கள்
பலவும் பாடி"

(நா. திவ். 655)

என்பதனுல் இதனை அறிகிறோம். தொண்டர்களின் பெருமை மிகவும் பழமையானது என்பதைத் 'தொண்டாய தொல்சீர்' (நா. திவ். 1227) எனப் பாராட்டியுள்ளனர்.

தொண்டரின் பாததூளிகையை மிகச் சிறப்பாகக் கருதியுள்ளனர்.

" ஆடிப்பாடி அரங்கவோ என்று
அழைக்குந்தொண்டர் அடிப்பொடி
ஆடநாம் பெறில், கங்கை நீர் குடைந்து
ஆடும்வேட்கை என்னுவதே"

(நா. திவ். 659)

இவ்வாறு பல பாசுரங்களில் தொண்டர்களின் சிறப்பையும் அவர்களுக்குச் செய்ய வேண்டிய சேவையையும் போற்றியுள்ளனர். இதன் மூலம் திருமாலின் திருவருளை எளிதில் பெற முடியும் எனும் நம்பிக்கையும் ஆழ்வார்களுக்கு இருந்ததைக் காணுகின்றோம்.

மறந்தும் வாய்கொண்டு மானிடம் பாடா மாண்புடையவர்களாக ஆழ்வார்கள் விளங்கினர். அக்காலக் கவிஞர்களுக்கு நம்மாழ்வார் விடுத்துள்ள அழைப்பினைக் காண்போம்.

" வம்மின் புலவீர்! நும்மெய்வருந்
திக்கைசெய்து உய்ம்மினோ!
இம்மன் னுலகில் செல்வர்இப்
போதில்லை! நோக்கினோம்;
நும்மின் கவி கொண்டு நும்இட்டா
தெய்வம் ஏத்தினுல்,
செம்மின் சுடர்முடி என்திரு
மாலுக்குச் சேருமே!"

(நா. திவ்ய. 2990)

என்பது சிறப்புமிக்க அறிவுரையாகும்.

ஆழ்வார்கள் பக்தி நெறிகளை வளர்க்கத் தங்கள் பாசுரங்களையே ஒரு கருவியாகக் கொண்டு, வைணவ சமயத்திற்கு ஒப்பற்ற தொண்டாற்றியுள்ளனர். அவர்களுடைய பக்திப் பாசுரங்கள், தமிழ் இலக்கியத்தை வளமுறச் செய்தன; புதியதோர் இலக்கிய மரபை உருவாக்கின; திருக்கோயில் வழிபாட்டு நெறியைப் பாமர மனிதன் இடத்திலும் பரப்பின. இன்றைய உலக பக்தி இலக்கியத்துள் - ஆழ்வாரின் அருளிச் செயல்கள் முதன்மை இடத்தைப் பெறத்தக்கதாக விளங்குகின்றன.

(தொடரும்)

# திருவடி கைங்கர்யம்

இராமபிரானை அறிந்த நாள் முதல் அவனை தன் திண் தோளில் சுமந்து திருவடி இரண்டையும் பக்திப் பரவசத்துடன் பற்றி தன்னையே அவன் வாகனமாக அர்ப்பணித்துக் கொண்டவன் அநுமன். இராம பட்டாபிஷேகப் பெருவிழாவிலும் இராமனுக்குத் திருவடித் தொண்டு புரியும் பெரும் பேற்றை பெற்றவன் அநுமன். திருவடித் தொண்டு ஒன்றே அவன் உயிர் மூச்சு; உயர் லட்சியம். அது பற்றியே அநுமனுக்கு 'திருவடி' என்னும் சிறப்புப் பெயர் அமைந்தது. இராம அவதார காலத்துக்கு முன்பு இருந்தே திருமால் திருவடித் தொண்டனை பட்சி ராஜன் கருடனின் புகழ் பாரெல்லாம் பரவியிருந்தது. எனவே பட்சி ராஜனைக் குறிக்க 'பெரிய திருவடி' எனவும் அநுமனைக் குறிக்க 'சிறிய திருவடி' எனவும் பரம பகவர்களிடையே பெயர்கள் வழங்கலாயின.

—ஆர். சுப்பராவ்-திருக்கோவலூர்.

தெரிந்து கொள்ளுங்கள் :

# ஜோதிர் லிங்கம்

இந்தியாவில் ஜோதிர் லிங்கங்கள் உள்ள திருத்தலங்கள் பன்னிரண்டு. அவை:

| | | | | | |
|---|---|---|---|---|---|
| 1. | காசி | 5. | ஓங்காரம் (நர்மதை) | 9. | திரியம்பகம் |
| 2. | கேதாரம் | 6. | வைத்திய நாதம் | 10. | குகமோசம் |
| 3. | சோமநாதம் | 7. | பீமசங்கரம் | 11. | ஸ்ரீசைலம் |
| 4. | உஜ்ஜயினி | 8. | நாகேசம் | 12. | இராமேசுவரம். |

—கமலா மாரியப்பன்-கோவை.

(12-ம் பக்கத் தொடர்ச்சி)

போது சொல்லப்பட்டது,'என்னிடம் ஒரு தடவை சரணாகதி என்று வந்தடைந்தவனை, ஸர்வ பூதங்களிடமிருந்தும் ஏற்படும் பயத்தைப் போக்கி, அபயம் (அடைக்கலம்) அளிக்கிறேன்' என்பதே.

**கீதாசரமஸ்லோகம் :**

பாரதயுத்தத்தின்போது, பகவான் கண்ணபிரானால் அர்ச்சுனனுக்கு கீதோபதேசத்தில் சொல்லப்பட்டதாகும். 'எல்லா தர்மங்களையும் விட்டு என்னை ஒருவனையே சரணமடைவாயாக, நான் உன்னை எல்லா பாபங்களிலிருந்தும் விடுவிக்கிறேன். எவ்விதத்திலும் நீ சோகிக்க வேண்டாம்' என்பதே சுருக்கமான பொருள்.

**13. பக்தித்ரயம் :**

பக்தித்ரயம் என்பது மாத்ரு பக்தி, பித்ரு பக்தி, ஆசார்ய பக்தி என்கிற மூன்றும் 'பக்தித்ரயமாகும்'. இவை எல்லோருக்குமே தெரிந்ததாகையாலே பொருள் சுருக்கம் தரப்படவில்லை.

**14. நாரதபக்தி ஸூத்ரத்ரயம் :**

நாரதபக்தி ஸூத்ரத்தில் பக்தியை ஸாத்விக பக்தி, ராஜஸ பக்தி, தாமஸ பக்தி என்று மூன்று வகையாகச் சொல்லப்பட்டுள்ளது. இவைகளும் பக்தித்ரயத்தைச் சேர்ந்ததேயாகும். முதலாவது ஸாத்விகபக்தி என்பது பகவானை அடைந்து, அந்த ஆனந்தானுபவத்திலேயே குறிக்கோளாகக் கொண்டு, ஏதாவது ஒரு ஸாத்விக தெய்வத்தை உபாசனை செய்து வழிபடுவது. இந்த உலகத்தில் சில சுக போகங்களை அடைய வேண்டும் என்ற சுயநலத்தில்,ஏதாவது ஒரு தெய்வத்தை உபாசனை செய்து வழிபடுவது ராஜஸ பக்தியாகும். மூன்றுவதான தாமஸ பக்தி என்பது சில சித்திகளை கைவரப் பெற்று, பூத, பைசாசு முதலிய துர்தேவதைகளை உபாசனையால் வசப்படுத்திக் கொண்டு, பிறர்க்கு இடர் விளைவித்து தனக்கு ஆதாயம் தேடிக்கொள்வது என்று கூறப்பட்டுள்ளது.

**15. அவஸ்தாத்ரயம் :**

ஒவ்வொரு மனிதனுக்கும் ஜாக்ரதாவஸ்தை, ஸ்வப்னாவஸ்தை, சுஷுப்தி என்று மூன்று அவஸ்தைகள் (நிலைகள்) உண்டு. ஜாக்ரதாவஸ்தை என்பது மனிதன் உறங்காமல், விழித்துக் கொண்டிருக்கும் நிலையாகும். இந்த நிலையில் ஆத்மாவும், தேகமும், வெளியுலகத்திலுள்ள பொருள்களைப் பார்த்தும், ஆராய்ந்தும் கார்யா கார்யங்களைச் செய்து கொள்கிறான்.

**ஸ்வப்னாவஸ்தை என்பது கனவு நிலை :**

இந்த நிலையில் தேகம் மட்டும் உறங்குகிறது. ஆத்மா எப்போதும் விழிப்புடன் இயங்கிக் கொண்டிருக்கிறது. பல இடங்களில் சஞ்சரித்து, விஷயானுபவங்களை அறிந்து கொள்கிறது. இதுவே 'ஆத்மாவானது' தேகத்தை விட்டு வேறானது என்பதற்குச் சான்றாகவும் உள்ளது. ஸ்வப்னாவஸ்தையில் நாம் காணும் கனவுகள் சில நடந்த காரியங்களை அல்லது நடக்கப் போகிற காரியங்களைக்கூட தெரிவிக்கலாம். சில கனவுகள் முற்றிலும் புதுமையாகக் கூட தோன்றுவதுண்டு.

சுஷுப்தி என்னும் நிலையானது ஆழ்ந்த உறக்க நிலையாகும். இந்த நிலையில் ஆத்மா, ஈஸ்வரனுடன் கூடி இருப்பதாகச் சொல்லப்படுகிறது. அதனால் ஆழ்ந்த உறக்கத்திலிருந்து விழித்தவுடன் களைப்பு நீங்கி, உற்சாகமாக இருப்பதாகத் தோன்றுகிறது. விழிப்பு நிலை ஏற்பட்டவுடன், மாயை வந்து சேர்ந்து கொள்வதன் காரணமாக, ஆத்மாவுடன் சேர்ந்து அனுபவித்த சுகானுபவத்தை மனிதன் மறக்க வேண்டியிருக்கிறது.

**16. தாபத்ரயம் :**

பாபத்ரயம் என்பது ஸஞ்சிதம், ப்ராரப்தம், ஆகாம்யம் அல்லது க்ரியமாணம் என்று மூவகைப்படும்.

ஸஞ்சிதம் என்பது முன் ஜென்மாக்களில் செய்த பாபத்தின் பலனை அனுபவியாமல் சேர்ந்துள்ளதற்கு 'ஸஞ்சிதம்' என்று பெயராகும்.

ப்ராரப்தம் ஒரு மனிதன் தன் வாழ்நாளில் அனுபவித்துக் கொண்டிருக்கும் துன்பங்களுக்கு (பாபத்தின் பலன்) ப்ராரப்தம் என்று பெயர்.

ஆகாம்யம் என்பது ஒரு மனிதன் இப்பிறவியில் செய்யும் கர்ம பலன்கள், சில இப்பிறவியிலேயே முழுவதும் அனுபவிக்க முடியாமல், மிச்சமுள்ள கர்மபலன்கள், ஸஞ்சிதத்துடன் சேர்ந்து அவனுடைய மறுபிறவியிலும் தொடரக் கூடியவைகளுக்கு ஆகாம்யம் அல்லது க்ரியமாணம் என்று பெயர்.

**17. குணத்ரயம் :**

ஸத்வகுணம், ரஜோகுணம், தமோகுணம் என்ற மூன்றாகும்.

தெளிந்த அறிவையும், மன அமைதியையும், எதையும் நிதானமாக மனதினால் நன்றாகச் சிந்தித்து, செயல்படும் தன்மைக்கு 'ஸத்வகுணம்' என்று பெயர்.

ரஜோகுணம் என்பது எப்போதும் ஏதாவது ஒரு காரியத்தை செய்து கொண்டிருக்கும் மனப்பான்மையும், மனதில் ஏதோ ஒருவித துடிப்புடன், ஒரு வித மனச் சஞ்சலத்தையும் கொடுக்கும் தன்மை. இதுபோது மனம் கட்டுக் கடங்காமல் போய் விடுவதுமுண்டு.

தமோகுணம் எப்போதும் தெளியாத அறிவும், சோம்பலுடன் கூட மனதில் காமக்ரோதாதிகளையும், தீய எண்ணம், தீயச் செயல்களையும் செய்யும் தன்மை தமோ குணமாகும். இங்கு ஸ்ரீ கிருஷ்ணன் அருளிச் செய்துள்ள கீதையின் 14ம் அத்யாயத்திற்கு, 'குணத்ரயவிபாகயோகம்' என்றே பெயரிடப்பட்டிருப்பதையும், இந்த அத்யாயத்தின் 6ம் ஸ்லோகம் முதல், 22ம் ஸ்லோகம் வரையிலும் பகவான், இக்குணங்களின் தன்மை

யையும், அவை மனிதனைப் பாதிக்கும் விதமும் விவரமாக தெரிவித்துள்ளான். மேலும் ஒரு மனிதன் உண்ணும் ஆகாரங்களைப் பொறுத்தே குணங்கள் அமையும் என்றும் கூறப்படுகிறது. இச்சந்தர்ப்பத்தில் ஸ்வாமி வேதாந்த தேசிகன் அருளிச் செய்துள்ள, 'ஆகாரநியமம்' என்ற பிரபந்த பாசுரங்களையும் படித்து நினைவில் வைத்துக் கொள்ள வேண்டியது.

18. ஸித்தாந்தத்ரயம் :

'அத்வைதம், விசிஷ்டாத்வைதம், த்வைதம்' ஆகிய மூன்றையும் ஸித்தாந்தத்ரயம் என்பர். பொதுவாக இவை அந்தந்த ஸித்தாந்தத்தை சேர்ந்தவர்களுக்கு ஓரளவுக்கு தெரிந்து இருக்கும் என்ற காரணத்தால் பொருள் சுருக்கம் கொடுக்கவில்லை.

19. கோலத்ரயம் :

எம்பெருமான் சந்நிதிகளில் குடி கொண்டிருக்கும் நிலைக்கு கோலம் (நிலை) என்று பெயர். சில சந்நிதிகளில் எம்பெருமான், 'வீற்றிருந்த திருக்கோலத்தையும் (உட்கார்ந்து இருக்கும் நிலை-உதாரணம் திருவாலி திருநகரி, திருமணிமாடக் கோவில் வானமாமலை முதலிய சந்நிதிகள்), சில சந்நிதிகளில் நின்ற திருக்கோலத்தையும்(உதாரணம் திருமலை திருப்பதி, ஒப்பிலியப்பன் கோவில் முதலிய சந்நிதிகள்) சில சந்நிதிகளில் கிடந்த திருக்கோலத்தையும் (இதையே சயனத் திருக்கோலம் என்றும் சொல்வார்கள்) (உதாரணம் ஸ்ரீரங்கம், திருவனந்தபுரம் முதலிய சந்நிதிகள்) கோலத்ரயம் என்பார்கள்.

20. ஜீவத்ரயம் :

ஜீவன்கள் நித்யர்கள், முக்தர்கள், பக்தர்கள் என மூவகைப்படுவர்.

நித்யர்கள் கர்ம வினையின் காரணமாக இவ்வுலகில் பிறந்திருந்தாலும், ஸம்ஸாரம் என்ற கடலில் சிக்காமல், எப்போதும் ஸ்ரீவைகுண்டத்தில் ஸ்ரீமந் நாராயணனுக்கு ஏதாவது கைங்கர்யம் செய்து கொண்டு எப்போதும் பகவானைத் தரிசித்துக் கொண்டிருக்கும் அனந்தன், கருடன் போன்றவர்கள் நித்யர்கள் (நித்ய ஸூரிகள்) எனப்படுவர்.

முக்தர்கள் இப்பூவுலகில் பக்தர் கோஷ்டியில் பிறந்து, சில காலம் இன்ப, துன்பங்களை அனுபவித்து, பகவத் பாகவத கைங்கர்யத்தால் பகவானை சரணாகதி செய்து, அவன் அருளுக்குப் பாத்ரமாகி, எம்பெருமான் திருவருளால், பந்தங்களிலிருந்து விடுபட்டு, பரமபதத்தை யடைந்து, அங்கும் கைங்கர்யங்கள் செய்து கொண்டு, பகவத் நினைவிலேயே மூழ்கி, ஆனந்தானுபவத்தில் இருப்பவர்கள் முக்தர்கள் எனப்படுவர்.

பக்தர்கள் இவ்வகையைச் சேர்ந்தவர்கள் தன் முன் பிறவிகளில் செய்த கர்மாக்களின் அடிப்படையில் தேவர், மனிதர், விலங்கு, பறவை, ஊர்வன, நீர் வாழ்வன, தாவரம் போன்ற ஏதாவது ஒன்றில் பிறந்து நற்செயல், தீச்செயல் முதலியவைகளைச் செய்து, அதன் பயனாக வாழ்க்கைக் கடலில் சிக்கி, இன்ப துன்பங்களை அனுபவித்துக் கொண்டிருப்பவர்கள். இவர்களுடைய நற்செயல், தீச்செயலுக்கேற்ப சொர்க்கம், நகரம் முதலியவைகளை அடைந்து, பலன் கழிந்த பிறகு, கர்மவினைக்கேற்ப ஏதாவது ஒரு பிறவியை அடைவார்கள். பின் தகுந்த ஆசார்யனை அடைந்து அவர் மூலம் பிறவிச் சுழலிலிருந்து விடுபட்டு, ஈஸ்வரனை அடையும் வழியறிந்து, பகவதநுக்ரஹத்தால் கர்மங்கள் ஒழிந்து, மோக்ஷமடையும் வரை இவ்வுலகில் இருப்பார்கள். மோக்ஷமடைந்ததும் முக்தர் கோஷ்டியில் சேர்ந்து விடுவார்கள். (இந்த ஜீவத்ரயமும் விசிஷ்டாத்வைத்திற்கு அவசியமானது).

21. அக்ஷரத்ரயம் :

அ, உ, ம என்ற மூன்று எழுத்துக்களும் சேர்ந்த 'ஓம்' என்னும் ப்ரணவமே அக்ஷரத்ரயமாகும். 'அ' என்னும் எழுத்து, 'ருக்' வேதத்திலிருந்தும்', 'உ' என்ற எழுத்து யஜுர் வேதத்திலிருந்தும், 'ம' என்ற எழுத்து 'சாமவேதத்திலிருந்தும்' தோன்றியது என்பர். இதனை விவரித்தால் வளர்ந்து விடும் என அஞ்சி இத்துடன் நிறுத்தப்படுகிறது. இச்சந்தர்பத்தில் பெரியாழ்வார் அருளிச் செய்துள்ள பெரியாழ்வார் திருமொழி 4ம் பத்து, 7ம் திருமொழியில் 10வது பாசுரமாக இருக்கும், 'மூன்றெழுத்ததனை, மூன்றெழுத்ததனால், மூன்றெழுத்தாக்கி - மூன்றெழுத்தை......'என்ற பாசுரத்தையும், இதற்கு காஞ்சி மஹாவித்வான் ஸ்ரீஉவே P.B.A., ஸ்வாமியின் உரையையும் நன்கு படித்து அறிந்து கொள்ள வேண்டியது.

22. ஸித்தித்ரயம் :

ஸ்ரீவைஷ்ணவ ஸித்தாந்தத்தின் பரமாசார்யராக விளங்கிய ஸ்ரீ ஆளவந்தார் அருளிச்செய்துள்ள ஆத்மஸித்தி, ஈஸ்வரஸித்தி, ஸம்வித்ஸித்தி என்ற மூன்று க்ரந்தங்களையும் சேர்த்து, 'ஸித்தித்ரயம்' என நம் பூர்வாசார்யர்கள் பெயரிட்டுள்ளனர். ஒரு விஷயத்தை ஆழ்ந்து, ஆராய்ந்து காணும் முடிவுக்கு 'ஸித்தாந்தம்' அல்லது 'ஸித்தி' என்று பெயர். இந்த ஸித்தித்ரயத்தின் பல பகுதிகள் (அழிந்து போயிருப்பது) நமது துரதிர்ஷ்டமேயாகும். ஸ்ரீராமாநுஜர் ஸ்ரீபாஷ்யம் எழுதுவதற்கு இதுவே ஆதாரமாயும், உறுதுணையாகவும் இருந்தது என்று நம் பூர்வாசார்யர்கள் கூறியுள்ளனர்.

ஆத்மஸித்தியின் பொருள் சுருக்கம் :

இதில், 'ஆத்மஸ்வரூபம்' ஆராயப்பட்டு ஸித்தாந்தப்படுத்தப்பட்டுள்ளது. அதாவது நான், எனக்கு, தானே எப்போதும் தோன்றும் ஆத்ம விஷயத்திலே தேகமே ஜீவன், புலன்

களே ஜீவன், மனமே ஜீவன், ப்ராணனே ஜீவன் (தேஹேந்த்ரிய மந: ப்ராணாதிப்யோந்யோந்ய ஸாதந: நித்யோ வ்யாபீ ப்ரதிக்ஷேத்ரமாத்மா பிந்ந: ஸ்வதஸ்ஸுகீ;) என்கிற பிற மத வாதங்களைக் கண்டித்து, இவற்றைக் காட்டிலும், இது வேறு பட்டதாயிருக்கும் ஜீவாத்மஸ்வரூபம் என்கிறது. இது ஞானத்தோடு கூடினதாய், நித்யமாய், அணுவாய், அநேகமாயும், ஆனந்தமயனாகவும் இருக்கிறது என்பது நிலைநிறுத்தப்படுகிறது.

ஈஸ்வரஸித்தியின் பொருள் சுருக்கம் :

வேதத்தை ப்ரமாணமாக ஒப்புக் கொண்டாலும் வேத வேத்யனை ஈஸ்வரனை ஒப்புக் கொள்ளாமல், யாகாதி யக்ஞங்களே சொர்க்கம் முதலிய பலன்களைக் கொடுக்கின்றன. ஜகத் காரணமாய், கர்ம பலன்களைக் கொடுக்கும் பகவானால் ஒரு காரியமும் ஆவதில்லை என்கிற வாதத்தைக் கண்டித்து ஸகல ப்ரபஞ்சங்களின் ஸ்ருஷ்டி, ஸ்திதி, ஸம்ஹாரம் எல்லாம் 'ஈஸ்வராதீனமே' என்பது நிர்ணயம் செய்யப்படுகிறது.

ஸம்வித் ஸித்தியின் பொருள் சுருக்கம் :

இந்த ஸம்வித்ஸித்தியின் பெரும் பாகம் அழிந்துபோய்விட்டது. இருப்பினும் தற்சமயம் நமக்குக் கிடைத்துள்ள 'ஸம்வித்ஸித்தி' க்ரந்தத்தில் இல்லாத பல பகுதிகளை, ஸ்ருதப்ரகாசிக பட்டரும். ஸ்வாமி வேதாந்த தேசிகரும் ஏற்படுத்திக் கொடுத்திருப்பது நமது பாக்ய விசேஷமாகும். பொதுவாக இந்த நூல், மாயா வாதத்தையும், அத்வைதத்தையும் கண்டனம் செய்வதாக உள்ளது என்பர். (இந்த ஸித்தித்ரயம் விசிஷ்டாத்வைதற்கு இன்றியமையாதது).

23. நாமத்ரயம் :

'அச்சுதா, அனந்தா, கோவிந்தா' என்ற மூன்று நாமாக்களுக்கும் 'நாமத்ரயம்' எனப்படும். 'அச்சுதானந்த கோவிந்த, நாம உச்சாரண பேஷஜாத் நஸ்யந்தி சகலா ரோகா: ஸத்யம் ஸத்யம் வதாம்யஹம்' என்பது ஸ்லோகம். இதன் பொருளாவது: அச்சுதா, அனந்தா, கோவிந்தா என்ற நாமங்களை உச்சரிப்பதாலேயே எல்லா வியாதிகளும் போய்விடுகின்றன. இவை உண்மை, உண்மையே என்று பேசுகிறேன் என்பதாகும். தவிர கங்கா, காயத்ரீ, கோவிந்தன் என்ற மூன்று நாமக்களுக்கும் நாமத்ரயம் என்ற பெயருண்டு என்பதும் சில பெரியவர்கள் சொல்லக் கேட்டதுண்டு. யார் ஒருவர் தினமும், கங்கையின் பெயரைச் சொல்லி ஸ்நானம் செய்தும், காயத்ரியை விடாமல் தினந்தோறும் ஜபித்தும், பரமாத்மா கோவிந்தன் பெயரையும் நினைத்தும் அவன் அருளிய கீதையையும் படிக்கிறார்களோ, அவர்களுக்கு மோக்ஷம் கிடைக்கும் என்று சொல்லப்படுகிறது.

24. பதத்ரயம் :

சந்தஸுக்களுக்கெல்லாம் தாயாகவும், உலகிலுள்ள சகல மந்த்ரங்களையெல்லாம் விட, மிக மிகச் சிறந்ததாகவும் விளங்கும், 'காயத்ரீ மஹாமந்த்ரமே' மூன்று பதங்களை கொண்ட பதத்ரயமாகும். காயத்ரியின் பொருள் விரிவுக் கஞ்சியே பொருள் சுருக்கம்கூட கொடுக்கப்படவில்லை. இருப்பினும், 'காயந்தம் த்ராயதே இதி காயத்ரீ' என்ற வசனத்தை ஒட்டி, இந்த காயத்ரியை யார் ஒருவர் விடாமல், தினமும், மூன்று வேளைகளிலும் முறையாக, ஜபிக்கிறார்களோ, அவர்களை காயத்ரி காப்பாற்றுகிறது என்று சொல்லப்பட்டுள்ளது.

25. யோகத்ரயம் :

கர்மயோகம், பக்தியோகம், ஞானயோகம் ஆகிய மூன்றும், 'யோகத்ரயம்' எனப்படும். இவை ஸ்ரீ கண்ண பிரானால், மகாபாரத யுத்தத்தின் போது, யுத்த பூமியில் அர்ச்சுனுக்கு ஏற்பட்டிருந்த கலக்கத்தையும், கவலையையும் போக்குவதற்காகப் பல உபதேசங்களை செய்தான். அவற்றின் தொகுப்பிற்கே, 'ஸ்ரீமத் பகவத் கீதை' எனப்பெயர். கீதையில்தான் கண்ணன், அர்ச்சுனனை வியாஜமாக வைத்து உலக நன்மைக்காக நமக்கு கர்மயோகம், பக்தியோகம், ஞான யோகம் என்ற மூன்று யோகங்களை (மார்க்கங்களைச்) சொல்லுகிறான். இதன் பொதுவானக் கருத்தாவது: உலகத்தில் மனிதர்கள் அவரவர்கள் வர்ணாஸ்ரம தர்மத்திற்குட்பட்டு, அவரவர்களுக்கு விதிக்கப்பட்ட கடமைகளையும், காரியங்களையும் பலனை எதிர்பார்க்காமல், எதையும் பகவத் அர்ப்பணமாகச் செய்ய வேண்டும் என்கிறான். தவிர அவனைத் தவிர வேறு யாரையும் தஞ்சமாக அடையாமல், அவன் திருவடிகளிலேயே உடல், பொருள், ஆவி ஆகிய எல்லாவற்றையும் அர்ப்பணம் செய்து, சரணாகதி செய்ய வேண்டும் என்றும் சொல்கிறான். அப்படி சரணாகதி செய்தவர்களுடைய கஷ்ட, சுக, துக்கங்களை எல்லாம் நீக்கி, பேரின்பமாகிய மேல் வீட்டை அளிப்பதாக உறுதி அளிக்கிறான் என்பதே யோகத்ரயத்தின் பொருள் சுருக்கமாகும்.

26. ருணத்ரயம் :

ருணத்ரயம் அதாவது பிறக்கும் போது பிராம்மணன் மூன்று கடன்களோடு பிறக்கிறான். அதாவது ரிஷி கடன், தேவகடன், பித்ருகடன் என்பதாகும். 'ஜாயமானோவை ப்ராம் மண: த்ரிபி: ரிண வான் ஜாயதே, ப்ரும்மசர்யேண ரிஷிப்யோ, யஞ்ஞேன தேவேப்ய:ப்ரஜயா பித்ருப்ய:' என்பது சாஸ்திரம்.

இம்மூன்று கடன்களையும், உரிய காலத்தில் உபநயனம் செய்விக்கப்பட்டு, வேதாத்யயனம் செய்வதால் ரிஷிகடனையும், யாகங்கள், யஞ்ஞங்கள் செய்வதால் தேவர்களுடைய கடனையும், உரிய காலத்தில் நல்ல கன்னிகையை மணந்து, அவள் மூலமாக நல்ல புத்ரர்களை அடைவதால்

பித்ருகடனையும் அடைத்து வீடு வதாக சாஸ்திரம் கூறுகிறது.

முடிவுரை :

மேலே விவரிக்கப்பட்டுள்ள அநேக 'மூன்றை'யும்அவற்றின் தொகுப்பின் சிலவற்றையும், நாம் அன்றாட வாழ்க் கையிலும், பேச்சு வழக்கத்திலும் உப யோகப்படுத்திக் கொண்டிருக்கிறோம். உதாரணமாக, நம் வீட்டில் குழந்தை களை ஆகாரம் முழுவதுமாக சாப்பிடு வதற்கோ அல்லது நாம் கூப்பிட்ட வுடன் வராமல் இருக்கும் போதும், நாம் '1, 2, 3 என்று மூணு தரம் சொல்வேன். நீயும் மூணு என்று சொல்லி முடிப்பதற்குள், வந்து சாப் பிட வேணும், அல்லது வந்துவிட வேணும்'என்று செல்லமாகக் கண்டிப் பதும் நாம் அறிந்ததேயாகும். தவிர வீட்டில் பேச்சு வழக்கில், 'மருந்தும் விருந்தும் மூன்று நாள்தான்' என்று பேசப்படுவதுண்டு. நீதி மன்றங்களி லும், சாட்சிகளை கூப்பிடும் போது, சாட்சிகளின் பெயரை மூன்று முறை கூப்பிடப்படுவதும் யாவரும் அறிந் ததே. தவிர பொருள்களை, ஏலம் போடும் போது ஏலப்பொருளை, ஏலம் எடுத்தவர்களுக்கு உரியதாக்குவதற் காக, ஏலப்பொருளின் கடைசியாக கூறிய விலையையும், மூன்று முறை கூறித்தான் ஏலத்தை உறுதி செய் கிறார்கள். பரிசுகள் கொடுப்பதிலும் கூட அநேகமாக முதற்பரிசு, இரண் டாம் பரிசு, மூன்றும் பரிசு என்று பரிசுகளைக் கொடுப்பதையும் நாம் பார்த்திருக்கிறோம். சிலர் பக்தி நூல்களை பாராயணம் செய்யும் போது, அந்நூல்களை மூன்று முறை படித்து முடிப்பதையும் காண்கிறோம். ஸ்ரீராமபிரானும் கூட இராவணனை வதம் செய்வதற்காக, அகஸ்திய முனி வரால் உபதேசிக்கப்பட்ட, 'ஆதித்ய ஹ்ருதயஸ்தோத்ரத்தை' மூன்று முறை ஆசமனம் செய்தும், மூன்று முறை ஜபித்த பிறகும் இராவணனை ஸம்ஹாரம் செய்தார் என்று ஸ்ரீமத் ராமாயணம் சொல்லுகிறது. ஒரு முக்ய காரியத்தைக் குறித்துச் செல் லும்போது, மூன்று பேராக போவது பொதுவாகஹிந்துக்களிடையே கிடை யாது என்பதும் உண்டு.

ஆகவே இந்த 'மூன்று' (மூன்றின் தொகுப்பு) நம் வாழ்விலும், பேச்சி லும், வேதாந்தங்களிலும் பல படி களில் கையாளப்பட்டுப் பெரும்பங் கும் கொள்கிறது என்பதைப் பார்த் தோம். ஆகவே நாமும் நம் முன்னோர் காட்டிய வழியிலேயே சென்று, 'அ, உ, ம' என்ற மூன்று அக்ஷரங்களும் சேர்ந்த 'ப்ரணவத்தையும்' ப்ரணவத் திற்கு ப்ரதிபாத்யனாக இருக்கும் எம் பெருமான் நாமங்களை சொல்லியும், அவன் திருவடிகளில் சரணாகதி செய் தும் பகவத், பாகவத கைங்கர்யங் களை செய்து கொண்டு, வாழ்க்கைக் கடலிலிருந்து விடுபட்டு, மேல் வீட்டை அடைய முயல்வோம்.



★

## கணக்கும் இல்லை! வழக்கும் இல்லை!

சிதம்பரம் ஸ்ரீசபாநாயகர் கோயில் நிர்வாகத்தை சீரிய முறை யில் தொடர்ந்து நடத்திட 'தில்லை மூவாயிரவர்' என்னும் பொது தீட்சி தர்கள் காலவரை அமைத்துக் கொண்டு (Periodically) கூட்டம் கூடி முடிவு செய்கிறார்கள். அக்கூட்டம் பேரம்பலம் என்னும் இடத்திலோ அல்லது கல்யாண மண்டபத்திலோ கூடும். ஸ்ரீ சபாநாயகரின் பிரதிநிதி யாக அங்கு ஒரு திருவிளக்கை தீட்சிதர் ஒருவர் கனகசபையிலிருந்து ஏந்திக் கொண்டு வருகிறார். பய பக்தியுடன் அதை அனைவரும் வரவேற் கிறார்கள். 'எல்லோரும் இந்நாட்டு மன்னர்' என்ற கொள்கை அங்கு பூரணப் பொலிவுடன் பிரகாசிக்கிறது. வரவு செலவு கணக்கை ஏட்டில் குறிப்பது இல்லை! 'கணக்கைக் காட்டு?' என்ற கேள்விக்கு இங்கு வகை யில்லை. ஆதலால் பகையும் இல்லை!

ஆனந்தக் கூத்தனின் திருவடியின்கீழ் வாழும் தீட்சிதர்களுக்கு 'மூவாயிரவர்' என்னும் பெயர் இன்னமும் வழங்கிய போதிலும் இன்று அவர்களது எண்ணிக்கை இருநூறுக்கும் குறைவேயாகும். 'ஏன் இந்தச் சறுக்கம்?' என்ற வினவிற்கு அவர்கள் கூறும் விடை, "காலத்தின் கூத்து!" என்பதேயாகும்.

ஸ்ரீ புண்டரீகவல்லி தாயாருடன் ஸ்ரீ கோவிந்தராஜப் பெருமாள் இங்குக் கோயில் கொண்டுள்ளார். இந்த வைணவ ஆலயத்தை பொது தீட்சிதர்கள்தாம் முன்னாளில் ஆராதித்து வந்தார்கள். இச்செய்தியைக் குலசேகர ஆழ்வாரும் திருமங்கையாழ்வாரும் பாடியருளிய பாசுரங்கள் மூலம் அறிய முடிகிறது.

'பூலோக கைலாயம்' என்னும் சிதம்பரம் சைவ-வைணவ சமரச நெறிக்கும் ஒரு அடையாளமாகத் திகழ்கிறது. இது ஓர் அதிசயம். ஆனால் உண்மை!

—ஆர். சுப்பராவ்-திருக்கோவலூர்.

# புல்லில் கிடந்த கருணையங் கடல்

கம்பராமாயணத்தின் யுத்த காண்டத்தில் வருணனை வழி வேண்டும் படலத்தில், வீடணனன் சொற்படி கடல் கடக்க வழிவிடுமாறு ஸ்ரீராமன் ஏழு நாள் தருப்பசயனத்திற் படுத்து வருண மந்திரத்தைச் செபிக்கிறன். இதனைக் கம்பர்,

"தருணமங்கையை மீட்பதோர் நெறி
தருக என்னும்
பொருள்நயந்து நன்னூல் நெறியடுக்கிய புல்லில்
கருணையங்கடல் கிடந்தது கருங்கடல்
நோக்கி
வருண மந்திரம் எண்ணினன் விதி
முறை வணங்கி".

என்கிறர்.

கடல் தன்னைப் பேரளவுடைத்ததாக நினைத்து, ஆணவம் கொண்டது. அதனல் ஒரு கடல் ஒரு கடலோடு மாறுபட்டுக் கிடந்தாற்போல, இராமன் என்னும் கடல் கருங்கடல் நோக்கிக்கிடந்தது. இதனை திருவாய்மொழி ஈட்டில் (6-9-3) கருணையங்கடல் கருங்கடல் நோக்கிக் கிடந்தது என்னும்படியிறே என்றும் அருளிச் செய்யப்பட்டது.

இவ்விதம் கருணையங்கடலாகிய ஸ்ரீராமன் கிடந்த இடம் எது ?

"தன்னை நைவிக்கிலேன் வல்
வினையேன் தொழுதும் எழு
பொன்னை நைவிக்குமப்பூஞ்செருந்தி
மணி நீழல் வாய்
என்னை நைவித்தெழில் கொண்டு
அகன்ற பெருமான் இடம்
புன்னை முத்தம் பொழில் சூழ்ந்த
காயபுல்லாணியே "

என்று திருமங்கைஆழ்வாரால்பாடப் பெற்றதும் புல்லாரணியம், புல்லாங்காடு, ஆதிசேது, தர்ப்பசயனம், திருவணை முதலிய பெயர்களைக் கொண்டு விளங்கும் திருப்புல்லாணி என்னும் திருப்பதி இராமநாதபுரத்திற்குத் தென் கிழக்கில் 9 கி.மீ. தொலைவில் அமைந்துள்ளது. சங்க இலக்கியங்களிலும், இராமாயணம் போன்ற நூல்களால் சிறப்பிக்கப்படும் தலம் இது.

**அகநானூறு தரும் செய்தி :**

இராமன் இலங்கை மீது படையெடுப்பது குறித்தும், அணைகட்டுவது குறித்தும் தம்முடைய துணைவராகிய சுக்ரீவன், அனுமன் முதலியவர்களுடன் ஒரு பெரிய ஆலமரத்தின் கீழ் அமர்ந்து, ஆராய்ந்து கொண்டிருந்தார். அப்போது அம்மரத்திலிருந்த பறவைகள் ஒல்லென ஒலித்தன. அவ்வொலி இராமனுக்கு இடையூருய் இருக்கவே இராமன் அவைகளை தம் தெய்வீக ஆணையாய் அமைதியாக இருக்கச் செய்தார்.

'வென்வேற் கவுரியர் தொன்முது
கோடி
முழங்கிடும் பௌவம் இரங்கும்
முன்றுரை
வெல்போர் இராமன் அருமறைக்கு
அவித்த
பல்வீழ் ஆலம்போல்
ஒலியவிந்தன்று இவ்வழுங்கல்
ஊரே "

என்னும் அகநானூற்றுப் பாடல் மேற்கூறிய வரலாற்றைக் கூறுகிறது. இது நிகழ்ந்த இடம் திருப்புல்லாணியே என்பது ஆராய்ச்சியாளர் முடிவு.

**தலபுராணம் கூறும் வரலாறு :**

இராமபிரான் இலங்கைத் தீவிற்குச் செல்ல அணைகட்ட இங்கு வந்தபொழுது தருப்பைப்புல்லைப் பரப்பி, அதனையே படுக்கையாகக் கொண்டனர் எனவும், கடலரசனும் வீடணனும் இங்கே வந்து சரண்புகுந்தனர் எனவும் கூறப்படுகிறது. அணைகட்டிய செய்தியை இராமன் சீதைக்குக் கூறுவதாய் கம்பராமாயணத்தில் மீட்சிப்படலத்தில் அமைந்த,

"மாருதி வந்து உன்னைப் பேதறுத்து
உனது பெற்றி
சொன்னபின் வானரேசர் தொகுத்
தது இச்சேது கண்டாய் "

என்ற வரிகள் மூலம் நாம் அறியலாம்.

**ஜகந்நாதர் :**

இக்கோவிலின் மூலவராக விளங்குபவர் ஸ்ரீ ஆதி ஜகந்நாதப் பெருமாள். அவரை வழிபட்டு அவரால் அளிக்கப்பெற்ற கோதண்டம் என்னும் வில்லினைக் கொண்டே இராவணனை வென்றர் ஸ்ரீ ராமன் என்பது தலபுராணம். ஸ்ரீ ஆதி ஜகந்நாதருக்குத் தெய்வச் சிலையார் என்னும் நாமமும் உண்டு.

திருமகள், நிலமகள், நீளாதேவி ஆகியோருடன் வீற்றிருந்த கோலத்தில் கல்யாண சுந்தரராக, "அன்னமாய் நூல் பயந்தார்", என்னும் பெயருடன் காட்சியளிப்பதைக் கண்டு களிக்கக் கண்கோடி வேண்டும்.

வடக்கே ஜகந்நாத க்ஷேத்திரமாகிய பூரியில் அருவ நிலையில் எழுந்தருளியுள்ள பெருமாள் இங்கு உருவ நிலையில் சங்கு சக்கரங்களுடன் நான்கு திருக்கைகளுடன் விளங்குகின்றர்.

---

திரு. எம். சீனுவாசன், எம்.ஏ.பி.எல்.
பரமக்குடி.

---

**பிற சன்னதிகள் :**

சதுர்ப்புஜராமர், வரதராஜப்பெருமாள், பட்டபிராமர், ஆழ்வார்கள், பத்மாசினித்தாயார், கோதை நாச்சி

யார், தொட்டிற் கண்ணன் ஆகிய சன்னதிகள் சிறப்பாக உள்ளன. இக்கோவின் மகாமண்டபத்தில் கடலிலிருந்து கண்டெடுக்கப்பெற்ற சலவைக் கல்லால் ஆகிய சுவேதசேது மாதவர் உருவம் கலை நயத்துடனும், கம்பீரமாகவும் அமைந்துள்ளது.

**தருப்பசயன ராமர் :**

தருப்பை அணையில் பள்ளிகொண்ட ராமர் சதுர்புஜங்களுடன் சேவை சாதிப்பது இங்கு ஒரு சிறப்பு. அவர் தம் உந்திக் கமலத்தண்டின் அமைப்பு காண்போர் கண்ணையும் கருத்தையும் கவர்வன. இவரை,

"வில்லால் இலங்கை மலங்கச் சரம்
துறந்த
வில்லாளன் "

என்று திருமங்கையாழ்வார் சிறப்பிக்கிறார்.

**அசுவத்த நாராயணர் :**

இக்கோயிலின் இரண்டாம் பிரகாரத்தில் புனித மரமாகிய அரசமரம் அமைந்துள்ளது. மற்ற அரச மரங்களுக்கும் இதற்கும் இரு வேறுபாடுகள் உண்டு. மற்ற அரசமரங்களின் இலைகளின் நுனி பெரியதாகவும் காம்பு சிறியதாகவும் இருக்கும். ஆனால் இங்குள்ள மரத்தின் இலை நுனி சிறியதாகவும் காம்பு பெரியதாகவும் உள்ளது. மேலும், இம்மரத்திலிருந்து விழுதுகள் இறங்குகின்றன. பக்தர்கள் இம்மரத்தையே அசுவத்த நாராயணனாகக் கருதி வழிபாடு செய்கின்றனர்.

**தாயார் சன்னதி :**

பத்மாசினி என்னும் பெயரால் தாயார் இரண்டாம் பிரகாரத்தில் அமைந்துள்ளார். இத்தாயாருக்கு உச்சி வேளைப் பூசையின் போது பாயசம் நிவேதனம் செய்யப்படுகிறது. புத்திரப்பேறு அற்றவர் அதனை உண்பதால் புத்திரபாக்கியம் பெறுவர் என்னும் நம்பிக்கை உள்ளது.

**பேறு பெற்றோர் :**

கைந்நிலை என்னும் தமிழ் நூலை இயற்றிய புல்லங்காடர், தொல்காப்பிய உரையாசிரியர் தெய்வச்சிலையார் ஆகியோர் இத்தலத்தைச் சேர்ந்தவர்களே.

புல்லவர், கண்ணுவர் ஆகிய ரிஷிகளும் இங்கே வழிபாடு செய்து பேறு பெற்றனர். அரிச்சந்திர புராணம் என்னும் தமிழ் நூல் இங்கே அரங்கேற்றம் செய்யப்பட்டது. இதனை அந்நூலின் பாயிரம்

"சதுமறைதேர் புல்லாணித்திருமான்
முன்னே
சக்கரத்தீர்த்தக் கரை மேன்
மண்டபத்துள்
கதி தருசீர் நெல்லூர் வாழ்வீரன்
ஆசு
கவிராசன் கவியரங்கம் ஏற்றி
னானே "

என்பதால் அறியலாம்.

**திருமங்கை ஆழ்வார் :**

கலியன் என்னும் இவர் இருபது பாடல்களால் இத்தலத்தைப் போற்றி மகிழ்கிறார். புல்லாணி நாதன் பாதம் பணிதலே நலம் என்பதை,

"ஓதி நாமம் குளித்துச்சி தன்னால்,
ஒளி மாமலர்ப்
பாதம் நாளும் பணிவோம் நமக்கே
நல மாதலின்
ஆது தாரான் எனினும், தரும்;
அன்றியும் அன்பராய்ப்
போதும் மாதே! தொழுதும்—
அவன் மன்னு புல்லாணியே!

என்னும் பாடலால் குறிப்பிடுகிறார்.

**திருவிழாக்கள் :**

ஆடி, மாசி மாதங்களில் ஸ்ரீ செகநாதப் பெருமாள் உத்ஸவமும், ஆவணியில் திருப்பவித்ரோத்ஸவமும், மார்கழியில் பகல் பத்து இராப்பத்து, வைகுண்ட ஏகாதசி முதலியனவும் மற்றும் பல சிறப்பு விழாக்களும் கொண்டாடப்படுகின்றன.

**முடிவுரை :**

பல்வேறு சிறப்புகளும், பழமையும் வாய்ந்த திருப்புல்லாணி என்னும் சிறந்த இந்தத் திவ்விய தேசத்தினை வழிபட்டுப் பல நலன்களும் பெற்று மகிழ்வோமாக. ★



# இராமகாதை - கம்பனுக்கு முன்னும் பின்னும்

'தமிழினுக்குச் சாகா வரமளிக்க
மாகாவியம் செய்து மண்ணில் நிலை
பெற்ற'வன்

கம்பன். அப்பெருங்கவியினை அறியாத தமிழருமில்லை. அவனது பேரிலக்கியத்தைக் கற்காத புலவோருமில்லை. இராமாயணம் என்று சொன்ன உடனேயே இராமபிரானது குணசாகரத்தில் அமிழ்ந்தோ, அல்லது கம்பனது கவிதைக் கடலில் மூழ்கியோ நம்மை முழுக்க இழந்துவிடுகிறோம். கவிச்சக்ரவர்த்தியே—

'பித்தர் சொன்னவும் பேதையர்
சொன்னவும்
பத்தர் சொன்னவும் பன்னப்
பெறுபவவோ?'

என்று அவையடக்கமாகக் கூறுகிறான். கம்பனது பெறலருங்காப்பியம் தமிழ்க் கவித்துவத்திற்குப் பேரெல்லையாய், காவியங்களுக்குச் சிரோ பூஷணமாய்விளங்குவதில் ஐயமில்லை. ஆயின் இராம காதை, கம்பனுக்கு முன்பே தமிழகத்தில் இருந்தது என்பதைப் பழைய இலக்கியங்கள் தெரிவிக்கின்றன.

புறநானூறில் எடுத்தாளப்படும் கதையைக் காண்போம். கிஷ்கிந்தையில் சேகரித்த சீதையின் அணிகலன்களைக் குரங்குகள் அணியத் தெரியாமல் மாற்றி மாற்றி அணிந்த காட்சி பெருநகையை உண்டுபண்ணியது போன்று வள்ளல்களின் ஆதரவில் வாழும் பாணர்கள், அவனது ஒப்புரவுச் சிறப்பால் தம் தொழிலை [illegible] காலையில் பாடுவதை மாலையிலும், திருக்கிறது" என்ற உரையாசிரியர் கூற்றாலும், 'யாப்பருங்கல விருத்தி' உரையாலும், 'புறத்திரட்டு' நூற்பாக்களாலும் இவ்வுண்மை அறியப்படும்.

'ஆள்வினை முடித்த அருந்தவ
முனிவன்
வேள்வியை போற்றிய இராமன்
அவனோடு
மிதிலை மூதூர் எய்திய ஞான்றே
மதியுடம்பட்ட மாக்கண் சீதை
கடுவிசை வில்ஞாண்
இடியெனக் கேளாக்
கேட்ட பாங்கின் வாட்டம் நீங்கி
துயிலெழுந்து மயங்கின ஞான்று'

எனவரும் தொல்காப்பிய மேற்கோள் இராமனும் சீதையும் ஒருவரையொருவர் அறிந்தபின், அவன் வில்லை முறித்தது கேட்டு சீதை மயங்கினாள் என்பதும், கம்பனுக்கு முன்பே படைக்கப்பட்டக் காட்சி.

புறத்திணைப் பலவற்றிற்கு மேற்கோளாகவே பேராசிரியர், நச்சினார்க்கினியர் போன்றோர் இராமாயணப் போர் நிகழ்ச்சிகளைக் காட்டுவர். புறத்திரட்டும் இதுபற்றிப் பல செய்திகளைப் புகலும்.

மாலையில் இசைப்பதைக் காலையிலும் இசைப்பதாக உவமிக்கின்றார் புலவர்.

இதனின்று இராமாயணக் கதை தமிழரால் சங்க காலத்தே அறியப்பட்டது விளங்கும்.

அகநானூற்றுப் பாடல் ஒன்று, இராமன் கோடிக் கரையிலே தன் துணைவர்களுடன், ஆலோசனை நடத்தியபோது ஒலி எழுப்பிய பறவைகளைக் கைகாட்டி அடக்கினான் என்கின்றது.

தொல்காப்பிய உரையில், "ஆசிரியப்பா வடிவில் இராமாயணம் இருந்

யாப்பருங்கல விருத்தியில் 'பாதம் பலவரின் பஃறொடை வெண்பா' என்ற நூற்பா உரையில் 'பல அடிகளால் வந்த பஃறொடை வெண்பா இராமயாணமும், புராண சாகரமும் ஆகிய செய்யுட்களால் கண்டு கொள்க' என்பர் உரையாசிரியர். இதனால் இராமாயண நூலொன்று வெண்பா வடிவில் இருந்தது தெளிவாகிறது.

திருமதி. நடாதூர் வி. திருமகள்
பாண்டிச்சேரி.

'வீரசோழியம்' என்ற நூலுக்கு உரை தந்த பெருந்தேவனார் இராமாயண வெண்பா ஒன்றை மேற்கோள் காட்டுவர்.

'மற்றிவனை மால் என்று அறிந்தால் அவ்வரக்கன்
பெற்றி கருதுவதென்? பேதையர் காள்—மற்றிவன் தன்
கண்தான் கடை சிவத்தற்குண்டோ கடலிலங்கை
வண்தார் அரக்கன் வாலி'

சிலப்பதிகாரத்தில் இராமகாதை சில இடங்களில் சுட்டப்படுகின்றது. இராமன் ஒரு மனிதன் என்ற நிலையில் இருந்து, திருமால் அவதாரமே எனப் போற்றப்படுகின்றது. கவுந்தி, கோவலனுக்கு ஆறுதல் கூறுகையில்,

'தாதை ஏவலில் மாதுடன் போகிக்
காதலி நீங்கக் கடுந்துயருழந்தோன்
வேதமுதல்வன் பயந்தோன் என்பது
நீ அறிந்திலையோ, நெடுமொழி யன்றோ ?'

என்பது கருதத்தக்கது. இராமனை 'வேத முதல்வன்' என்று ஆய்ச்சியர் குரவையிலும் வற்புறுத்துகிறார். அடிகள்.

இராமனைப் பிரிந்த அயோத்தியின் துயரத்தை—கோவலனைப் பிரிந்த புகார் மக்களுடைய வருத்தத்துடன் ஒப்புமைப்படுத்துவான் கோசிகன்.

மணிமேகலையில் இராமன் குரங்குகளைக் கொண்டுக் கடலை அடைந்த வரலாறு காட்டப்படும்.

'குரங்கு கொணர்ந்தெறிந்த நெடு மலையெல்லாம்
அணங்குடை அழற்கல் வயிறு புக்கு ஆங்கு'

எனுமிடத்து, குரங்குகள் மலைகளை எறிந்துக் கடற்பாலம் கட்டிய செய்தி அறியப்படுகின்றது.

தேவார மூவரும், ஆங்காங்கு இராமன் இராவணனைக் குறிக்கத் தவறவில்லை. ஞானசம்பந்தர் தன் பதிகந்தோறும் 8-ம் பாடலில்இராவணனைக் கூறுகின்றார். இராமன் வணங்கிய இராமேச்வரம் தேவாரத்திலும், சைவத்திருமுறைகளிலும் வரும். அவ் இராமன், திருமாலவதாரம் என்பதை அவர்கள் ஏற்றுப் போற்றியுள்ளனர்.

ஆழ்வாராதிகள், இராமாயணக் கதையைத் தம் திருப்பாசுரங்களில் எடுத்தாண்டுள்ளனர். இராமகாதை முழுவதையும் குலசேகரப் பெருமான் தம் 'பெருமாள் திருமொழி' யில் சுருக்கமாகப் பாடியுள்ளார். இராமனைப் பிரிந்து வருந்திய தசரதன் மனோநிலையையும் அழகாக வர்ணிக்கிறார். பெரியாழ்வார், அனுமன் சீதையிடம் சில அடையாளங்களைக் கூறியதாக, ஒரு பாசுரத்தில் பகர்கின்றார். திருமங்கை மன்னன், இராமன் குகனோடு கொண்ட நட்பை, நாடகப் போக்கில் படைத்துள்ளார்.

கூனியின் முதுகில் இராமன் மண்ணுருண்டை எறிந்தவரலாற்றைத்திருமழிசைப் பிரான் 'திருச்சந்த விருத்தத்தில்' பாடுகின்றார். குரங்குகள் அலைகடலில் அணைகட்டிய வரலாற்றைத் தொண்டரடிப் பொடியாழ்வார் காட்டுவார்.

அகலிகை வரலாறு, தாடகை, சூர்ப்பணகை, ஹனுமான், கூனி வரலாறுகள் திவ்யப்ரபந்தம் முழுவதும் சிதறிக்கிடப்பன.

'கற்பார் இராமனையல்லால் வேறு கற்பாரோ'

என்று ஆழ்வாரில் முதன்மையான நம்மாழ்வார் வியந்துரைப்பர்.

ஆழ்வார் பாடல்களின் வாக்கிலும், போக்கிலும் தோய்ந்த கம்பன், அவர் தம் திருவுளப்பாங்கினைத் தம் கவித்வத்தால் உணர்ந்து, ஓர் ஒப்பற்ற காவ்யத்தை ஆற்றலுறப் படைக்கிறான்.

ஆழ்வார்கள் கண்ட இராமன், வானின்று இறங்கி, மண்ணுலகம் உய்ய வந்த பரம்பொருள்எனில், மானுடக் கோலம் பூண்டு நன் மகனாய், நல்லரசனாய், கணவனாய், நண்பனாய் உலகத்தையும் ஒன்றுறத் தழுவும் மாமனிதனாகக் கம்பனது இராமன் காட்சி அளிக்கிறான்.

சுக்ரீவன் கூற்றாக வரும்

'மானுடம் வென்றதம்ம' — என்னும் கம்பரின்சொற்கள்அவ்இராமன் மனித குலத்தை உய்விக்க வந்த அண்ணல் என்பதைத் தெளிவுபடுத்தும்.

ஆயினும் கம்பன் பெரும்பாலும் வான்மீகியையே பின்பற்றுகிறான் என்பதை மறுக்கமுடியாது. கம்பனைப் படிக்கும்போது, அவன் குறிப்பிட்ட சமயத்தவன்என்ற எண்ணமே நம்மனதில்தோன்றுவதில்லை. அதைப்படித்து நைந்து உருகும்படித் தமிழுக்கும், தமிழ் நாட்டினர்க்கும் ஒரு தனிப்பட்ட கௌரவத்தைத் தந்துவிட்டான்.

14-ஆம் நூற்றாண்டில்ஸ்ரீராமானந்தர் இயற்றியதாகச் சொல்லப்படும், 'அத்யாத்ம ராமாயணம்', இதைப் பின்பற்றி மலையாளத்தில் ஹிந்தியில் எழுந்த இராமாயணங்களும், பௌத்த, ஜைனஇராமாயணங்களும், பம்பா இராமாயணம் எனப்படும் 'இராமச்சந்திர சரித புராணம்', ஸ்ரீபுராணத்தில் வரும் சில பகுதிகள் முதலியவை பிற இராம கதைகளாம்.

தமிழர் பண்பாடு இலக்கியத்தில் கம்பனது பெருங்காப்பியத்திற்கு முதலிடம் உண்டு என்பதை மறுக்க முடியாதே!





# வடுவூர் கோதண்டராமன்

தமிழ் நாட்டில் ராமனுக்கு இருக்கிற நாணயம், செல்வாக்கு, புகழ் வேறு எந்தக் கடவுளர்க்கும் இல்லை என்று எளிதாகக் கூறிவிடலாம். இதற்குக் காரணம் என்ன? துருவினால் அறியலாம் மெய்ப்பொருளை!

தமிழன் எப்போதுமே ஒழுக்கத்துக்கு ஏற்றம் கொடுத்தவன். ஒருத்தனும் ஒருத்தியுமாக மனையறம் நன்கு நடத்திப் பொருள் ஈட்டி இன்பம் துய்த்து, வீடு பெற விழைந்த வரலாறு ராமனது.

இப்படிப்பட்ட தமிழன், "ஏகும் நல்வழி அவ்வழி என் மனம்" என்ற உறுதிப்பாட்டிலும், "இப்பிறவிக்கு இரு மாதரைச் சிந்தையிலும் தொடேன்" என்று செவ்விய வரம் பிலும் நின்றவனை வந்தித்து வணங்கத் தயங்குவானே? அதனால்தான் மனிவன் அவன் புகழ்பாடும் காவியம் எழுதினான்; ஓவியம் தீட்டினான், சிற்பத்தில் வடித்தான். கல்யாண ராமன் கோதண்ட ராமன், வேங்கட ராமன், சீதாராமன், ரகுராமன், ஜானகி ராமன், கோசலை ராமன், பட்டாபி ராமன், காசி ராமன், சேது ராமன், அனந்தராமன் போன்ற எண்ணற்ற பெயர்களால் அவனை உள்ளார்போடு அழைத்தான்.

பேராயிரம் கொண்ட இப்பரமன் திருநாமங்களில் வசிஷ்டர் இட்ட "ராமன்", விபீஷணன் சூட்டிய "ராகவன்", நம்மாழ்வார் அருளிய "நம்பன்", ஆண்டாள் அன்புடன் அளித்த "இனியன்" என்ற திருநாமங்களே மந்திர சக்தி வாய்ந்தன.

"ராம" என்ற வடமொழிப் பெயரைத் தூய அமுதத் தமிழில் "இனியன்" என்று மொழிப்பெயர்த்துக் கொடுத்த ஆண்டாள் அல்லவோ உண்மையான தமிழ்த்தாய்!

இந்நான்கு பெயர்களுள் "ராம என்ற சொல்லே, பால்போல நோய்க்கு மருந்தாய், பசிக்கோர் உணவாய், நன்னிலைக்கோர் இனிய பானமாய், தாரகம், உத்தாரகம், போஷகம் என்ற மூன்று சிறப்பினைப் பெற்றது.

ராம நாமத்தை மட்டும் ஜபித்து உய்யலாம், ராமனை மட்டும் வழிபட்டு உய்யலாம் என்பது பெரியோர்களின் அநுபவத்தினின்று தெரியும்.

குறும்பு செய்யும் பிள்ளையாரை "ராம" என்ற பெயரைச் சொல்லிப் பார்வதிதேவி மகிழச் செய்வாள் என்று விநாயக புராணம் கூறுகிறது. அதாவது, பார்வதி ராம நாம ஜபம் செய்து, ராமனை வழிபட்ட பின்பே சிவபெருமானுக்கு அன்னமிடுவாள் என்கிறார் ஒரு பக்த கவி.

சிவபெருமான் காசியில் விசுவநாத கங்காதரனாக எழுந்தருளி, காசியில் இறப்பவர்களின் காதுகளில் "ராம" நாம மந்திரத்தை உபதேசிக்கிறாராம். தவிர, ஸ்காந்தத்தில் சனத்குமாரர் பக்த நாரதருடன் உரையாடும் வர்ணனைப் பகுதியில் ராம நாமத்தின் சிறப்பு மிகவும் கொண்டாடப்பட்டுள்ளது.

நம்மாழ்வார், "கற்பார் இராம பிரானை அல்லால்மற்றும் கற்பரோ?" என்று அருளிச் செய்தார். ஆனால், திருமங்கையாழ்வாரோ, "ஆழி வண்ண! நின் அடியிணை அடைந்தேன்" என்றார் தொண்டரடிப் பொடியாழ்வார், "சிலையினால் இலங்கை செற்ற தேவனே தேவனாவான்" என்றார்.

நாலாயிர திவ்யப்பிரபந்தத்தில் பற்பல இடங்களில் ராமன் புகழ்ந்து பேசப்படுகிறான். "சேவகன் சீர் கேளாத செவி என்ன செவியே!" என்று இளங்கோவடிகளும், "ராமா" என்று நாக்கினால் ஒரு தடவை சொன்னால், உடல் உள்ளேயும் வெளியேயும் விட்டத்தில் இட்ட விளக்கைப்போல் நின்று, அறியாமையை அழிக்கும் என்று பக்த துளசிதாஸரும், "ராம நீ ஸமானமெவரு" (ராமா! உனக்குச் சமானம் யார்?) என்று ஸத்குரு தியாகராஜரும் வாய் தித்திக்க உள்ளம் மணக்கப் பாடிப் புகழ்ந்தார்கள் என்றால், ராமனின் பெருமையைச் சொல்லவும் வேண்டுமோ?

வட நாட்டிலிருந்து வந்தாலும், நல்ல தமிழனாகத் தமிழ் நாட்டில்

திரு. வி. எஸ். ஸ்ரீனிவாசன்,
தஞ்சாவூர்.

நிலைத்து நின்றுவிட்டான் ராமன். அதுவும், காவிரிக் கரையிலே இந்தக் காவிய நாயகனின் திருவுரு எப்படி எல்லாமோ உருவாகி இருக்கிறது. என்றாலும், தஞ்சையை அடுத்த வடுவூர் என்னும் சின்னஞ் சிறிய ஊரிலே, நீண்டு உயர்ந்த விமானமோ அல்லது விண் மறைக்கும் கோபுரமோ இல்லாத ஒரு சிறிய கோயிலிலேகோதண்டம் ஏந்தியகையனாக, சீதா சமேத லக்ஷ்மண, ஹநுமானுடன் காட்சி கொடுக்கிறான். அந்த ராமன்தான் கவிச்சக்ரவர்த்தி கம்பன் பாடிய "அந்தம் இல் அழகன்", ஓவியத்து எழுதவொண்ணா உருவத்தன் என்பதற்கு எடுத்துக்காட்டாக நிற்கிறான்,இங்கே கோதண்டராமனாய்

தஞ்சை நகருக்குக் கீழ்த்திசையில், அதாவது தஞ்சாவூர்—ராஜமன்னார் குடி பஸ் பாதையில், தஞ்சையிலிருந்து சுமார் 24 கிலோ மீட்டரில் உள்ளது வடுவூர் என்னும் சிறிய ஊர். சோலைகளும், அழகிய கழனிகளும், குளங்களும் சூழ்ந்த மிகச் செழிப்பான ஊருமாகும் இது. இங்குள்ள மக்கள் பெரும்பாலும் விவசாயத்தையே நம்பி ஜீவனம் செய்கின்றனர்.

இங்கு ஏரியின் கரையில் மிகவும் கம்பீரமாகத் தோற்றமளிப்பதே வடுவூர் ராமன் கோயில். வடுவூர் எனப் பெயர் வரக்காரணம், ஊரைச் சுற்றிலும் மாமரங்கள் நிறைந்துள்ளதே யாகும்அவற்றில்மாவடுக்கள் வருஷம் முழுவதும் அக்காலத்தில் காய்த்துக் குலுங்குமாம். இப்பொழுதும் சுமார் பத்து மாதங்கள் வரை மாமரங்கள் காய்த்துக் குலுங்குவதைக் காணலாம்.


வடுவூர் கோயில் முன்தோற்றம்

இங்கே பிறந்து வாழ்ந்து ராமனது அருளைப் பெற்றுப் பல நவீனங்கள் எழுதிப் புகழ் பெற்றவர் வடுவூர் கே. துரைசாமி அய்யங்கார். அவற்றைப் படித்தவர்களுக்கு இந்த ஊரைப்பற்றி நன்கு தெரியும். சுமார் முந்நூறு ஆண்டுகளுக்கு முன் தஞ்சையை மாண்புடன் ஆண்டுவந்த மராட்டிய மன்னர்களால் இக்கோயில் கட்டப்பட்டது. இங்கு எழுந்தருளி யிருக்கும் கோதண்டராமன், இதற்கு முன்பு திருத்துறைப்பூண்டி (தஞ்சை மாவட்டம்)க்கு அருகில் உள்ள "தலை ஞாயிறு" என்ற சிறிய கிராமத்தில் ஒரு மாமரத்தின் அடியில் சீதை, லக்ஷ்மண, பரதன், ஹநுமான் இவர்களுடன் புதையுண்டிருந்தான்.

இறைவன், தான் இவ்வாறு பூமிக் கடியில் இருப்பதை மராட்டிய மன்னருக்குக் கனவில் அறிவித்து, தனியாக ஒரு கோயிலில் பிரதிஷ்டை செய்யும் படி சொல்லவே, மன்னரும் அந்தக் கட்டளைப்படிதம்பரிவாரங்களுடன் இங்கு வந்து, புதைந்திருந்த வடிவங்களை நடு இரவில் வெளியே எடுத்தார்.

அதற்குள் தலை ஞாயிறு மக்கள் கண் விழித்து எதிர்ப்புத் தெரிவித்தனர். அவர்களைச் சமாதானப் படுத்தி ராமன், சீதை, ஹநுமான் என்ற வடிவங்களை மட்டும் எடுத்துக் கொண்டு வரும்போது இடையே வடுவூரில் உள்ள மக்கள் அரசரை வேண்ட, அங்கே இம் மூன்று சிலை வடிவங்களையும் பிரதிஷ்டை செய்து விட்டாராம் மன்னர். இதைத் தவிர வேறு பல அகச் சான்றுகளும் இப்பெருமானைப் பற்றிக் கிடைத்துள்ளன.

சிற்றடக்கமான ஆனால் கம்பீரமான ஆலயம்; ஆலயத்தின் முகப்பில் சிறிய ராஜ கோபுரமும், வடக்குப் பக்கம் "ஸ்ரீ ஆதிவண் சடகோப யத்திந்திர மஹா தேசிகன்" சந்நிதியும் உள்ளன. கோயிலுக்குள் ஸ்ரீ தேசிகன் சந்நிதி, வாகன மண்டபம், வெளி முற்றம் முதலியனவும் உள்ளன. உள்ளே ஸ்ரீ பாஷ்யக்காரர் சந்நிதியும் உள்ளது. ராமன் கோதண்டராமனாய் ஹனுமானுக்குச் சீதாகல்யாணக் காட்சியைக் காட்டியருளியவண்ணம் தரிசனம் தருகிறான். இங்கு ராமனுக்கு வலப்பக்கம் சீதாதேவியும் இடப்பக்கம் லக்ஷ்மணன், ஹநுமான் ஆகியவர்களும் காட்சி தருகிறார்கள்.

இங்குள்ள உத்ஸவராமன் வடிவம் கண்களில் அருள் ஒளிவீச, கன்னத்தில் புன்முறுவல் விளங்க, திருமுகத்தில் கருணை பெருக, மிகவும் மிடுக்கானத் திருக்கோலத்துடன், எதிரில் வருவோரிடையே நின்று பேசி அருளுவதுபோல் காட்சியளிப்பான். எந்த விதமான அலங்காரங்களும், எந்தக் கோலத்தில் செய்தாலும் அப்படியே பொருந்திப், பார்ப்போரின்கண்களைக் கொள்ளை கொள்வான்.

பங்குனி மாதம் அமாவாசை தொடங்கி ஸ்ரீ ராம நவமி வரை, பிரம்மோத்ஸவம் பத்து நாட்கள் நடைபெறுகிறது. சதுர்த்தியன்று கருடஸேவையும், அஷ்டமியன்று நவநீத ஸேவையும், நவமியன்று திருத்தேரும் விசேஷ உத்ஸவங்களாகும்.

தவிர, சித்திரையில் அக்ஷய திருதியையன்று உதய கருடஸேவையும், புரட்டாசியில் நவராத்திரியும், மார்கழியில் அத்யயன உத்ஸவமும் நடைபெறுகின்றன.

புரட்டாசி சிரவணத்தில் தேசிகன் உத்ஸவமும், பிரதி மாதம் பஞ்ச பர்வப் புறப்பாடும் உண்டு.

புராதன சிறப்புப் பெற்ற இந்தப் புனித க்ஷேத்திரத்துக்குப் பக்தர்கள் திரளாக வந்து கருணாமூர்த்தியும் சரணாகத ரக்ஷகனுமான கோதண்டராமனை ஸேவித்து எல்லா நலமும் அடைவார்கள் என்பது பலரது வாழ்க்கை அனுபவமாகும். ஃ

(4-ஆம் பக்கத் தொடர்ச்சி)

துறைப்பேராசிரியர்டாக்டர். பொன் சௌரிராஜன் அவர்களின் வரவேற்புரையைத் தொடர்ந்து, விழாவிற்குத் தலைமை வகித்து உரையாற்றிய பல்கலைக்கழகக் கல்லூரி முதல்வர் பேராசிரியர் ஆர். ஸ்ரீநிவாசராவ் அவர்கள் தம்முரையில் தனித்தன்மை கொண்ட தமிழ்மொழியின் சிறப்பையும், மொழிகளிடையே நிலவ வேண்டிய ஒற்றுமையே தேசியத்தைவளர்க்கும் என்பதையும் குறிப்பிட்டு, தமிழ்த்துறை ஆற்றி வரும் பணிகளையும் பாராட்டினார். பின்னர், 'உரைக்கோவை' நிகழ்ச்சிகளை புதுதில்லி ஸாகித்ய அகாடமி செயலர்பேராசிரியர் இந்திரநாத் சௌத்ரி அவர்கள் துவக்கி வைத்தார் பின்னர் அவர் பேசுகையில், இந்திய மொழிகளின் அடிப்படை தனித்தன்மை, அதன் இலக்கண அமைதிகள் எந்த அளவிலும் மேலைநாட்டு உறவுகளால் பாதிக்கப் படவில்லை என்று கூறினார். அதனைத் தொடர்ந்து திரு. கால்டுவெல் பாதிரியாரின் திருவுருவப்படத்தினை, தமிழ்த்துறையின் முன்னாள் தலைவர் டாக்டர் என். சுப்புரெட்டியார் அவர்கள் திறந்து வைத்து உரையாற்றினார். பின்னர் தமிழக அரசின் தமிழ் பண்பாட்டு வளர்ச்சிக்கழகத்தின் செயலர். டாக்டர். அவ்வை நடராசன் அவர்கள் தம் சிறப்புரையில் 19 மற்றும் 20 ஆம் நூற்றாண்டுகளின் போது மேலை நாட்டு உறவுகளால் தமிழ் மொழி மற்றும் இலக்கியம் பெற்ற மாற்றங்களை, வளர்ச்சிகளைப் பட்டியல் போட்டுப் பேசினார். இறுதியில் தமிழ்த்துறைத் தலைவரும், இவ்வுரைக்கோவை குழுவின் இயக்குநருமான டாக்டர். தேவ சங்கீதம் அவர்கள் நன்றியுரை வழங்கினார். பல்கலைக்கழக மான்யக் குழுவின் உதவியுடன் இவ்வுரைக்கோவை நிகழ்ச்சிகள் நடைப்பெற்றன.

### பொறுப்பாண்மைக் குழு முடிவுகள்

இலங்கையிலுள்ள ஸ்ரீ கிருஷ்ண பக்தி இயக்கத்தின் வேண்டுகோளின்

# பின்னுமிங்குக் கம்பன் பிறந்தான்!

ஆலிலைவாழ் கண்ணபிரான் ஆசைப்பட்டான்;
அடுத்தொருகால் பிறந்திட்டேன் அன்னை நாட்டில்!
நாலாறு வயதினனாய் வளர்ந்த பின்னர்
நலியாத நம்பிக்கை நெஞ்சிற் பூண்டு
காலார நடந்திட்டேன்: கண்ணிற் பட்ட
காட்சிகளைச் சித்தரிக்கக் கருதி வந்தேன்;
நூலறிந்த சான்றோரே! நுவலும் கூற்றிற்
குறையிருப்பின் பொறுத்தல்நும் பொறுப்ப தன்றோ!

கனவுலகில் நான் கண்ட கோசலத்தைச்
சமைத்துளரா எந்தமிழர் என்று பார்த்தேன்;
முனமிருந்த நிலைமையினும் மோசம்! எங்கும்
முடை நாற்றம்! மொய்க்கின்ற மக்கள் கூட்டம்!
உணவின்றித் தவிக்கின்ற பல்லோர் ஓலம்
உப்பரிகை வாசிகட்கோ உறைக்க வில்லை!
மனமுவந்து பகிர்ந்தளிக்கமாட்டார்! வேறு
மார்க்கமதைச் செயலாக்கா விட்டால் மாள்வர்!

கற்பொழுக்க வாழ்வதனின் மகிமை செப்பக்
காகுத்தன் சானகிதம் கதையைச் சொன்னேன்;
விற்றிடும்பல் பொருள்களிலே மலிவாய்க் கற்பு
விலைபோகக் கண்டு மனம் வெந்தேன்; நொந்தேன்!
பொற்சிலையைக் கொண்டுவிற்பார் போல என்று
புதுக்கவிஞ ‌ உவமைக்காய்ச் சொல்லிப் போகத்
தற்பரமாம் தெய்வத்தின் சிலைகள் தம்மைத்
தயங்காமல் விற்கின்றார்; சாற்றக் கூசும்!

கொத்தடிமை முறைச்கிங்குக் குறைவே இல்லை;
கூட்டாகக் கற்பழிக்கும் கொடுமை வேறு!
சித்தமெலாம் பித்துடைய இலங்கை வேந்தன்
சிறு பொழுதும் மைதிலியைத் தீண்ட வில்லை;
பத்தியுடன் நாயகியைப் பாது காத்தேன்!
பாரதத்து மங்கையர்கள் இன்று நாட்டில்
எத்துக்கும் படுந்துன்பம் ஏடு கொள்ளா!
எஞ்சியதோர் அவதாரம் எடுப்பாய்! எந்தாய்!

வேதத்தின் நாயகனும் விமலன் நாமம்
விளம்புதற்கே இராமகதை தேர்ந்தெ டுத்தேன்;
தாதைசொற் கடவாத தனய னென்னும்
இராமபிரான் படிப்பினையை யாரே கொண்டார்?
ஏதங்கள் ஏதுமில்லா உலகைக் காண
ஏசு முதல் காந்திவரை எண்ணில் பேர்கள்
போதித்த தத்தையும் புதைத்து விட்டார்!
புன்மையேன் கவிகள்தாமா புரட்சி மூட்டும்?

ஈரமனம் கருணையுளம் ஈகைப் பண்போ(டு)
எவர் மாட்டும் அன்புகொளும் அருளும் எல்லாம்
தாரணிவாழ் மாந்தரிடம் கண்டே னல்லேன்;
ஏட்டளவில் உதட்டளவில் தங்கக் கண்டேன்;
ஓரிருவர் மாட்டேயும் சலிப்பே மிஞ்சும்!
உலகோரின் ஈனமதை ஒடுக்கி யாளச்
சீரார்ந்த சீதரனே திரும்ப மண்ணில்
திருவுள்ளம் மிகக்கொண்டு தோன்றல் என்றோ?

ச. கறுப்பையா - இராமநாதபுரம்.

## சந்தாதாரர்களுக்கு . . .

31-5-89—ஆம்தேதியுடன் முடிவடையும் ஸப்தகிரி சந்தாதாரர்களின் எண்கள் கீழே கொடுக்கப்பட்டுள்ளன. சந்தாவைப் புதுப்பித்துக்கொள்ளும்போது, தங்கள் சந்தா எண்களைக் கண்டிப்பாகக் குறிப்பிடவும். 'ஆசிரியர்' ஸப்தகிரி, தி.தி.தே. திருப்பதி. எனும் முகவரியுடன் ஆங்கிலத்தில் தொடர்பு கொள்ளவும்

69 70 92 100 114 122 191 192 194 309 310 316 320 321 322 325 329 330 336 657 660 668 674 677 680 682 685 686 687 691 1550 1554 1561 1577 1600 2973 2974 2980 2989 2993 2994 2996 3006 3010 3012 3016 3018 3020 3021 3023 3032 3033 3035 3037 3047 4223 முதல் 4236 4238 முதல் 4264 4266 முதல் 4278 4280 முதல் 4286 4288 முதல் 4297 4300 முதல் 4307 4309 முதல் 4324 4326 4328 முதல் 4337 4339 முதல் 4356

படி தி. தி. தேவஸ்தானம், ஆகும் செலவில் பாதியை ஏற்றுக்கொள்ளும் வகையில் ஸ்ரீராமதையின் பஞ்சலோக திருவுருவச் சிலை ஒன்று விரைவில் இலங்கைக்கு அனுப்பப்படும்.

திருப்பதியிலுள்ள தி. தி. தேவஸ்தானத்தாரின் ஸ்ரீ வேங்கடேஸ்வரா கீழ்த்திசைக் கல்லூரியில் தெலுங்கு மற்றும் இந்தி மொழி கற்கும் மாணவர்களுக்காக வழங்கப்படும் உதவித் தொகை ரூ. 75/- லிருந்து ரூ. 100/- ஆக உயர்த்தப்பட்டுள்ளது.

திருமலை ஸ்ரீ வேங்கடேஸ்வரர் மற்றும் திருச்சானூர் ஸ்ரீ பத்மாவதி தாயார் ஆகியோரது வண்ணத் திருவுருவங்களைப்புதியதாகத் தீட்டவேண்டும் என்ற தீர்மானத்தின்பேரில் இப்பணிக்காகச் சென்னை ஓவியம் மற்றும் கைவேலைப்பாடு கல்லூரியை அல்லது பம்பாய் ஜே. ஜெ. கலைக்கழகத்தாரை அணுகுவதென்றும் மேலாண்மை முடிவு செய்துள்ளது.

சித்தூர் மாவட்ட கிரந்தாலயா சமஸ்தா தன் கிளை நூலகத்தினை திருமலையில் செயல்படுத்தும் வகையில் திருமலை முதல் புதிய சத்திரத்தில் 4-வது அறையினை மாதம் ஒன்றிற்கு ரூ. 1/- என்ற வாடகைக்கு விடுவதென்று மேலாண்மை முடிவு செய்துள்ளது.

தி.தி. தேவஸ்தானம் தன் பொறுப்பில் கட்டும்படியான திருமண மண்டபங்களுக்கான சில விதிமுறைகள் தற்போது சீரமைக்கப்பட்டுள்ளன. திருமண மண்டபங்களுக்கான நிலத்தினை இலவசமாக தி. தி. தேவஸ்தானத்திற்கு சம்பந்தப்பட்டவர்கள் வழங்கவேண்டும்.50,000க்கு உட்பட்ட மக்கள் தொகை கொண்ட நகராட்சிக்குப்பட்ட நகரத்தில் ரூ. 11 இலட்சத்திற்குமிகாமலும்,50000 க்குமேற்பட்ட மக்கட்தொகையினைக்கொண்ட நகரத்தில் ரூ. 18 இலட்சத்திற்கு மிகாமலும் திருமணமண்டபங்கள் கட்டப்படவேண்டும். கட்டப்படும் திருமண மண்டபங்கள் வளர்ச்சியுறும் பகுதியில் இருந்தால் ஆகும் செலவில் மூன்றில் ஒருபங்கினையும், பின்தங்கிய பகுதியில் இருந்தால் ஐந்தில்ஒரு பங்கினையும் நன்கொடையாளர்கள் ஏற்றுக்கொள்ள வேண்டும். ஒதுக்கப்பட்ட தொகைக்கு அதிகமாகும் செலவினை, சம்பந்தப்பட்ட நன்கொடையாளரே ஏற்றுக்கொள்ள வேண்டும். இவ்விதிமுறைகள் 1—3—89 முதல் அமுலாக்கப்படும்.

திரு. பி. வி. சத்யநாராயணா ஐ.பி.எஸ். அவர்கள் தி. தி. தேவஸ்தானத்தின் புதியதலைமைப்பாதுகாப்பு அலுவலராக 10—3—89 முதல் பதவி ஏற்றுக்கொண்டார்.

### ஆர்ஜித பிரம்மோத்சவம்

இதுவரை கிருஹஸ்தர்களால் ரூ. 1000 செலுத்திதிருமலையில் நடத்தப்பெறும் ஆர்ஜிதபிரம்மோத்சவத்தின் போது 12 வாகனங்களில் உத்சவரின் திருவீதி திருவுலா அமைந்திருந்தது. தற்போது இப்பிரம்மோத்சவத்தின் போது, மிகவும் முக்கியமாகக் கருதப்படும் பெரிய சேஷ வாகனம், கருட வாகனம், ஹனுமந்த வாகனம் ஆகிய வாகனங்களின் மீது மட்டுமே உத்சவர் திருவீதி திருவலம் மேற்கொள்வார்.மேலும்இவ்வார்ஜிதசேவையின் கட்டணம் ரூ. 500/- ஆக குறைக்கப்பட்டுள்ளது. மற்றைய வாகன சேவைகள் குறிப்பிட்ட கிழமைகளின் போது நடைபெறும். தங்கவாகனத்திற்கு ரூ. 125/- எனவும், வெள்ளி வாகனத்திற்கு ரூ. 100/- எனவும் கட்டணம் வசூலிக்கப்படும். ★

(3-ம் பக்கத் தொடர்ச்சி)

மாறுது, நிதானம் இழக்காது இருக்கும் கௌசல்யை, சுமித்ரை இன்று பல பிரச்சனைகளால் சமுதாயத்தில் தடுமாறும் பெண்களுக்கு நல்ல வழிகாட்டிகளாவர். கொள்கை தவறுனாலும் தலைவனுக்கு வலிமை சேர்ப்பதே தொண்டனின் முதற் சடமை என்பது மந்திரை மற்றும் கும்பகர்ணனிடமிருந்து நாம் பெறும் அறிவுரையாகும். இதற்கு நேர்மாறாக உலகம் தூற்றினாலும் ஏற்றதோர் கொள்கைக்கு மாசு ஏற்படின் வீடும், நாடும், சுற்றமும் துறத்தலே அறம் என்பதை வீடணன் பாத்திரம் உணர்த்துகின்றது. தலைவன் — தொண்டன் — நண்பன் எனும் முக்கோண உறவுக்கு முன்னுதாரணமாக விளங்குவது இராமன் – அனுமன் நட்பு.

எனவே தந்தை, தாய், குரு, மனைவி: மகன், சகோதரன், நண்பன், தொண்டன் என்று ஒருவனுடைய வாழ்க்கையில் பங்கு பெறும் எல்லா அங்கத்தினர்களையும் தங்கள் காவியங்களில் உருவாக்கி, அவர்கள் மூலம் அவரவர்களுடைய சமுதாயப் பொறுப்புக்களை, கடமைகளை விளக்கிக்காட்டிய வால்மீகியினையும், அவன் வழி நின்று தமிழ்ப் பண்பாட்டின் பெருமைகளையும் சேர்த்து இராமகாதை யாத்த கம்பனையும் இத்தருணத்தே வணங்கி, அவர்கள்தாம் கூறிட்ட நற்கருத்துக்களை நாம் நம் சொல்லிலும், செயலிலும் பின்பற்றுவோமாக.







நாராயணவனத்திற்கு . . வருகை புரியுங்கள்!

## ஸ்ரீ கல்யாண வேங்கடேஸ்வரசுவாமி கோயில், பிரம்மோத்சவம்,

## 17–5–89 முதல் 26–5–89 வரை

| தேதி | நாட்கள் | காலை உத்சவங்கள் | இரவு உத்சவங்கள் |
|---|---|---|---|
| 17-5–89 | புதன் | ——— | சேனாபதி உத்சவம், அங்குரார்ப்பணம் |
| 18-5–89 | வியாழன் | திருச்சி உத்சவம் துவஜாரோஹணம் | பெரிய சேஷவாகனம் |
| 19-5–89 | வெள்ளி | சிறிய சேஷ வாகனம் | ஹம்ஸ வாகனம் |
| 20–5–89 | சனி | சிம்ம வாகனம் | முத்துப் பந்தல் வாகனம் |
| 21-5–89 | ஞாயிறு | கல்ப விருக்ஷ வாகனம் | ஸர்வ பூபால வாகனம் |
| 22–5–89 | திங்கள் | பல்லக்கில் மோகினி அவதாரம் | கருட வாகனம் |
| 23–5-89 | செவ்வாய் | ஹனுமந்த வாகனம் (மாலை வசந்தோத்சவம்) | கஜவாகனம் |
| 24-5–89 | புதன் | சூர்யப் பிரபை | சந்திரப் பிரபை |
| 25–5-89 | வியாழன் | திருத்தேர் | ஹஸ்வ வாகனம் (கல்யாணோத்சவம்) |
| 26–5–89 | வெள்ளி | சக்ர தீர்த்தம் | திருச்சியில், துவஜாவரோஹணம் |

